# நினைவழியா நாட்கள்



## புதுவை இரத்தினதுரை

இது ஒரு தமிழ்த்தாய் வெளியீடு

| | | |
|---|---|---|
| நினைவழியா நாட்கள் (கவிதைத் தொகுதி) | – | புதுவை இரத்தினதுரை |
| வெளியீடு | – | தமிழ்த்தாய் வெளியீடு |
| முதற்பதிப்பு | – | ஆவணி 1993 |
| ஓவியங்கள் | – | தயா |
| பதிப்பு | – | மாறன் பதிப்பகம்,<br>664, மருத்துவமனை வீதி<br>யாழ்ப்பாணம். |
| மறுபதிப்பு | – | அனைத்துலகச் செயலகம்<br>தமிழீழ விடுதலைப் புலிகள் |
| அச்சுப்பதிப்பு | – | தமிழ் அச்சகம், பிரான்ஸ் |


## கவிஞரின் பிற வெளியீடுகள்

- ★ வானம் சிவக்கிறது (கவிதைகள்) 1970
- ★ ஒரு தோழனின் காதல் கடிதம் (கவிதை) 1976
- ★ இரத்த புஷ்பங்கள் (கவிதைகள்) 1980
- ★ களத்தில் மலர்ந்தவை (ஒலிநாடாக் கவிதைகள்) 1989

# காணிக்கை

கண்ணைத் திறந்தாலே.... கல்லறைகள்
என்றான
மண்ணில் உறங்குகின்ற
மாவீரர் தாளடியில்
இந்நூலைக் "காணிக்கை" என்றளித்து
எந்தனிரு;
கண்ணில் வழிவதையென் கைதுடைக்க
மெய்சிலிர்க்க வைத்தேன்.
வணங்குகின்றேன்.
வாயெடுத்துப் பாடுகின்றேன்
செத்துப்போம் வரையிவரின்,
சேவடிகள் போற்றிடுவேன்.



நினைவழியா நாட்களை
எங்கள் கைகளிலே தந்து
என் நினைவினிலே..... நிலையாகி விட்ட

தமிழ்த்தாய் வெளியீட்டகத்தினர்
மாறன் பதிப்பகப் பொறுப்பாளர்
நிர்வாகி, ஊழியர்கள்

என்கவிதைகளைத் தேடித் தொகுத்து
அழகு செய்த நண்பர்களான,

இயக்கச்சி - எஸ். கருணாகரன்
இணுவையூர் சிதம்பரதிருச்செந்திநாதன்
வீரமாணிக்கதேவன்துறை - வ. சண்முகநாதன்
ஓவியர் தயா
அ. யேசுராசா
கலைஞர் ஞானசேகரம்

கவிதைகளை தட்டச்சில் பொறித்தளித்த தங்கைகள்

செல்வி. மு. தெய்வநாயகி
செல்வி. தி. ஜீவராணி ஆகியோருக்கும்

நான் கவிதைகள் எழுதும்போது
காற்றுக்கூடக் குழப்பாமல் காவலிருந்தும்
பக்கத்திலிருந்து பணிபுரிந்தும்
எனக்கு எல்லாமுகமாகிய என்னவள்

சிறீரஞ்சனிக்கும்

என் உதிரப்பூ மகள்

மாலிகாவுக்கும்



தமிழீழ விடுதலைப்புலிகள் இயக்கத் தலைவரும்
தமிழீழ தேசியத் தலைவருமான
திரு. வே. பிரபாகரன் அவர்கள் வழங்கிய



# வாழ்த்துரை

தலைமைச் செயலகம்,
தமிழீழம்.
*05.08.1993*

காலத்தின் மூச்சாக வாழ்வியக்கம் அசைகிறது. அந்தக் காலத்தையும், அந்தக்காலமாக விரியும் வாழ்வையும், அந்த வாழ்வாக அவிழும் மனித இன்னல்களையும், விளைச்சல்களையும் நுட்பமாகச் சித்திரிக்கும் கலை இலக்கியங்கள் உன்னதமானவை.

தான் பிறந்த மண், தான் வளர்ந்த சூழல், தான் உறவு கொள்ளும் சமூகம், தாம் வாழும் காலம் என்ற ரீதியில் வாழ்க்கையே ஒரு கலைஞனது படைப்புத்தளமாக அமைகிறது. வாழ்வின் புறநிலை உண்மைகளை மூலப்பொருளாக எடுத்து கலைப்பொருள் படைப்பவனே, சிறந்த கலைஞன்.

'புதுவை அண்ணா' என நாம் அன்பாக அழைக்கும் புதுவை இரத்தினதுரை ஒரு சிறந்த கலைஞர்.

அவர் இந்த மண்ணைக் காதலிப்பவர். இந்த மண்ணின் மக்களை நேசிப்பவர். இந்த மண்ணின் விடுதலையை இலட்சியமாக வரித்துக்கொண்டவர். மண், மக்கள், விடுதலை என்ற முப்பொருளை மூலப்பொருளாக எடுத்து கலைப்பொருள் படைப்பவர். கவிதை அவரது கலைப்பொருள். அந்தக்கலையில் அவருக்கு இங்கு எவரும் நிகரில்லை.

புதுவை இரத்தின துரையின் கவிதையில் ஒரு புதுமை இருக்கிறது; அழகும் ஆழமும் இருக்கிறது. ஒரு இசை இருக்கிறது. ஒரு ஈர்ப்பு சக்தி இருக்கிறது.

இந்தத்தேசத்தின் பண்பாட்டு மரபில் ஆழவேரோடி நிற்பதால், அவரது கவிதைக்கு அலாதியான வீச்சும் வலிமையும் உண்டு. சதையும் இரத்தமுமாக இந்த மண்ணின் பண்பாட்டுப் படிமங்கள் அவரது கவிதைக்கு உயிர் வடிவம் கொடுக்கும்.

மனித அவலங்களையும் ஏக்கங்களையும் படிமக்காட்சிகளாகச் சித்திரித்து, இனவாதக் கொடூரத்தின் அராஜகத்தை அழுத்தமாக உணர்த்திக் காட்டுவதுடன் ஒடுக்குமுறைக்கு எதிரான ஆவேசமிக்க கொதிப்புணர்வையும் அவரது கவிதை தட்டியெழுப்புகிறது.

புதுவை இரத்தினதுரையின் படைப்பிலக்கியம் தமிழீழ

தேசிய விடுதலைப் போராட்டத்திற்கு ஒரு உந்துசக்தியாக இருக்கிறது. கவிதை உலகில், போர்க்கால இலக்கியத்திற்கு இலக்கணம் வகுத்துக் கொடுத்த பெருமை அவரைச் சாரும். அவரது இலக்கியப்பணியின் முக்கியத்துவம் இதில்தான் தங்கியிருக்கிறது.

எமது தேசத்தின் போராட்ட வாழ்வையும் வரலாற்றையும் தமிழீழ இலக்கிய இயக்கத்திற்குள் முதன்மைப்படுத்தி, தமிழ்த்தேசிய பிரக்ஞையை விழிப்புறச் செய்ததில் அவரது பங்கு கணிசமானது. விடுதலைக்காக ஏங்கும் தமிழினத்தின் ஆன்ம தாகமாக வெளிப்பாடு காணும் அவரது கவிதை, போர்க்கால இலக்கியத்திற்குப் புதுமையும் செழுமையும் கொடுக்கிறது.

புதுவை இரத்தினதுரை இலக்கியப் படைப்பாளியாக மட்டுமன்றி, ஒரு இலட்சியப்போராளியாகவும் எமது விடுதலை இயக்கத்தில் இணைந்து நிற்பவர். இலட்சியப்படைப்பிலும், இலட்சியப் பயணத்திலும் அவரது பணி சிறப்புடன் தொடர எனது நல்லாசிகள்.

**புலிகளின் தாகம் தமிழீழத்தாயகம்**

**வே. பிரபாகரன்**
**தலைவர்**
**தமிழீழ விடுதலைப் புலிகள்.**

# வாக்குமூலம்

என் அன்பினுக்குரியவர்களே!
என்ன அவசரம்?
வாசலில் உம்மை வரவேற்கின்ற போதே
என் வாக்குமூலத்தையும்
கூறிவிடுகின்றேன்.
வானவில்லுக்கு எவரும் வர்ணம் பூசுவதில்லை.
கரையைத் தழுவும் அலைகளை,
திரும்பிப்போ என்று;
எவரும் கட்டளை இடுவதில்லை.
குருவிகளுக்கு இதுதான் உங்கள் கூடு என்று,
எவரும் பாதைகாட்டி விடுவதில்லை.
கவிஞனும் இப்படித்தான்.
அவனுக்கு எவரும்,
அடியெடுத்துக் கொடுக்க முடியாது;
கொடுக்கவும் கூடாது.
மூண்ட நெருப்பைக்
காற்றால் தூண்ட முடியுமே தவிர
காற்றே நெருப்பின் மூலமாக முடியாது.
இது போன்றதுதான் கவிதையும்.
பாடத்திட்டம்போல,
கவிதையைப் படிக்க முடியாது.
கவிஞனை உயர்த்தி விடலாமே தவிர,
உருவாக்க முடியாது.
தண்ணீருக்கு நிறமில்லை என்பது விஞ்ஞானம்.
பச்சை நிறமென்பது கவிதை.
காற்றைக் கண்களால் பார்க்க முடியாதென்பது

வாழ்வியல் உண்மை.
தென்றலைத்
தொட்டுத்தழுவலாம் என்பது கவிதை.
உணர்ச்சி, உவமை, கற்பனை, படிமம், குறியீடு
இவையெல்லாம்,
கவிதையை அழகுபடுத்தும் ஆடைகள்.
அரிதார ஒப்பனைகள்.
ஆடைகள் தேவையானவையே;
அதற்காக ஆடைகளே ஆளாக முடியாது.
வீரியமிக்க வார்த்தைகள் கவிதைக்கு உயிரூட்டும்.
என்றாலும்.
வார்த்தைகளின் கோலமும், ஜாலமும் மட்டுமே
கவிதையாகாது.
சரி, அப்படியாயின் கவிதையென்றால் என்ன?
வாழ்க்கைதான் கவிதை.
கண்ணுக்கு முன்னால் விரிந்து கிடக்கும்,
மண்ணிலிருந்தே கவிதையும் உருவாகின்றது.
காதில் விழும் செய்திகள் தரும் உணர்வுகள்கூட,
கவிதையாகலாம்.
நெஞ்சில் விழுந்து அதிர்வூட்டுபவையும்,
நினைவில் வந்து தடம்பதிப்பவையும்,
கவிதைக்கு கருப்பொருளாகி விடலாம்.
பட்டும் படாமலும்,
மண்ணைத் தொட்டும் தொடாமலும்,
சிறகை விரித்து உயரப்பறக்கும்
சிட்டுக்குருவியல்ல கவிஞன்.
நிலக்கிளி,
மண்புழு,
அறுகம்புல்

இவைகள்போல கவிஞனையும்
மண்ணிலிருந்து பிரிக்கமுடியாது.
அப்படியானால்,
என்னையும் என் மண்ணிலிருந்து பிரிக்க முடியாது.
வசந்த காலத்தில் மட்டும்,
குயில் வாயெடுத்துக்கூவும்.
மழைமேகம் கவிகின்ற போதுதான்,
மயில் அழகு காட்டி ஆடும்.
பறவைகளுக்கு பாட்டும் பரதமும்
சொந்த மகிழ்ச்சியின் சுகம் கருதியே வரும்.
ஆனால் கவிஞன் அப்படியல்ல....
ஊரின்,
உலகத்தின்,
தன்னினத்தின், மனுக்குலத்தின்
சோகத்தைத் தூக்கி மடியிலே கட்டுவான்.
வீரத்தை எடுத்து முடியிலே பதிப்பான்.
தன்னினம்,
விடுதலைக்கு விலைகொடுக்கும் போது,
கவிஞனின் கவிதை;
கைவாளாக்கிக் கொள்கிறது.
பூக்களுக்கு ஏன் பூத்தோம் என்று புரியாது.
வாய்க்காலில் ஓடிவரும் நீருக்கு,
போகுமிடம் தெரியாது.
ஆனால் கவிஞனுக்குத் தன் பிறப்பின் அர்த்தமும்,
போகும் வழித் தெளிவும்.
நிச்சயம் தெரியும்.
தெரியாது என்பவன் கவிஞனல்ல.
தெரிந்தும் ஊமையானவன் மனிதனே அல்ல.
மூச்சுவிடும் அனைத்துமே போராடுகின்றன.

போராட்டமே மனுக்குலத்தின் அசைவு.
தேங்கி நிற்கும் எல்லாமே மாசடையும்.
போராட்டம் நீரோட்டம் போன்றது.
எனவே அங்கு
தன்னலத் தவளைகள் முட்டையிடுவதில்லை.
பொறாமைப் பேத்தைகள் பிறப்பதில்லை.
பெற்றவளே தன் பிள்ளையைப் புகழக்கூடாது.
என்பார்கள்.
எனவே, என் கவிதை பற்றி
எதுவும் இங்கே கூறமாட்டேன். நான் சொல்லத்
துடித்தவற்றை,
உள்ளே உள்ள கவிதைகள் சொல்லும்.
நான் அடிமையாக இருக்க விரும்பவில்லை.
ஆகவேதான் விடுதலையை விரும்புகிறேன்
நான் சுதந்திரமாக இருக்க ஆசைப்படுகின்றேன்.
அதனால்தான்
விடுதலையை நோக்கிய போராட்டத்துடன்,
இணைந்திருக்க விரும்புகின்றேன்.
விடுதலை தேடிப்புறப்பட்ட அணியில் ஒருவனாக,
வேங்கைகளில் ஒருவனாக இருப்பது,
எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறது.
சாரமற்ற ஒரு சராசரி வாழ்வாகி
என் வாழ்வு கழியாமல்,
பொருள் பொதிந்த, அர்த்தம் நிறைந்த
போராட்டமே வாழ்வான வாழ்வே,
எனக்கு நிறைவாக இருக்கிறது.
அநீதிக்கு எதிராக அணிவகுப்போர்
எல்லோருமே கவிஞர்களே!
நீதியின் பக்கம் நிமிர்ந்து நிற்கும்,

எல்லோருமே கலைஞர்களே!!
விரல்களை விரித்து மடித்து எண்ணிக்கொண்டு
பெயர்களைச் சொல்லிப் பாருங்கள்.
எங்கள் தேசியத் தலைவர் வே. பிரபாகரனின்,
பெயரைச்சொல்லி முதல் விரலை மடிப்பீர்கள்,
நெருப்பாக நின்று எதிரியை நீறாக்குவது
இவரின் ஒருபக்கமென்றால்,
நிலவாக குளிர்ந்து நிழலாக நிற்பது
இவரின் மறுபக்கம்.
பிரபாகரன் என்ற பெயர்
தலைவன் என்றும், தளபதி என்றும் நின்றுவிடாது,
கலைஞனென்றும், கவிஞனென்றும் நீளும்.......
அவரின் கொற்றக் குடையின்கீழ் நிற்கும்
பல்லாயிரக் கணக்கானவரில்
நானும் ஒருவனென்று பதிவு இருக்கும்.
எவ்வளவு பெருமை.
அந்தத் தலைவனின் பேனா
என் கவிதைகள் பற்றிப் பேசியதா?
இதைவிடப்பேறு
எவருக்குக் கிடைக்கும்!
இராமாயண காவியம் மெய்யானால்
அநுமானே
எம்மண்ணில் ஆதியில் கால்வைத்த
ஆக்கிரமிப்பாளன் ஆகின்றான்.
பொய்யானால்
வால்மீகியின் ஆதிக்க உணர்வைக் கண்டு
எனக்கு ஆத்திரம் வருகின்றது
பாரதப்படைகள் இங்கு வந்த
ஒவ்வொரு தடவையும்

எங்கள்மண்
பற்றி எரிந்துள்ளது.
எல்லோரையும் போலவே
பாரதப்படைகளை
நானும், என் பரம்பரையும்
மறக்கமாட்டோம்;
மன்னிக்கவும் மாட்டோம்;
நான் எழுதி வைத்த
எண்ணிலடங்காத கவிதைகளையும்
என்னைத்தேடி வீடு வந்த இந்தியச் சிப்பாய்கள்
எப்படிச் சிதைக்க முடியும்?
கைநடுங்காமலும், மெய் பதறாமலும்
என் கவிதைகளை எப்படி எரிக்க முடிந்தது?
தகனத்திற்குப்பின் தளிர்த்தவைகளும்
நினைவில் நிழலாடி நின்றவைகளும்
பலரின் வீடுகளில் படுத்திருந்தவைகளும்
நண்பர்களால் தேடிச் சேர்த்தபின்
'நினைவழியா நாட்கள்' என்றாகியுள்ளது.
நூலாக்க முயன்று வென்ற நெஞ்சங்களுக்கு
நன்றிகள்,
மீண்டும் சந்திப்போம்.

புத்தூர் கிழக்கு,
புத்தூர்,
தமிழீழம்.
*10-09-1993*

அன்பன்

**புதுவை இரத்தினதுரை**

# அணிவகுப்பு

பக்கம்

## கூண்டைத் திற

ஆண்டு பலவாக அடங்கி,
குனிந்த தலை
மீண்டும் நிமிர்த்தாது இருக்கின்றாய்
அந்தோ பார்
காலடிகள் பட்டு கசங்குகின்றது புல்
நாங்கள்
நாலடிகள் எடுத்து நடப்பதற்குள்
முன்போல,
மீண்டும் நிமிர்ந்து மிடுக்கோடு நிற்கிறது !
யானையைக்கூட அடக்கினாள்
"அரியாத்தை"
யாரிவள்?
உன் பூட்டி.
பூனைக் கண்ணோடு புகுந்த அந்நியனை
ஓட விரட்டினான் ஒருவன்.
யாரிவன்?
உன் பூட்டன்.
வேண்டும் உனக்கிந்த வீரம்
தமிழனே!
கூண்டைத்திறந்து குதித்து வெளியேவா.

*வெளிச்சம்*
*தை 1993*

## ஊழிக்கூத்து எப்போது?

பெண்ணே! கண்களைத் திற.
விழிநீரைத் துடைத்து எறி.
அதில் திரிபோட்டு விளக்கேற்று.
உலகம் உனக்கு திறந்தவெளிச் சிறைச்சாலை;
விலங்கிடப்படாத கைதி நீ.
உனது விடுதலைக்கு தேதி குறிக்கவில்லை;
"என்னை விடுதலை செய்"
என்றாவது "மகஜர்" கொடுத்தாயா?
அதுகூட இல்லை.
வளையலும், மெட்டியும், கனகாம்பரமும்
உனக்கு வடிவுதான்
அதனால்தானே,
சேலைக்கடைப் பொம்மை போலக்
காலம் கழிக்கின்றாய்.
எனக்குத்தாய்........ இன்னொருவனுக்குத் தாரம்.......
அடுத்தவனுக்கு அக்கா......... மற்றவனுக்கு மகள்.......
எத்தனை அவதாரங்களாகின்றாய்!
என்றாலும் அடங்கிய வாழ்வுதான்
எத்தனை யுகங்களாக........
புல்லாகி, பூடாய், புழுவாய், மரமாகி
செல்லாத வாழ்வு உனக்கு?
உன் ஊழிக்கூத்து எப்போது?

*வெளிச்சம்*
*பங்குனி 1993*

# உலகம் எப்போது ஊமையானது?

“அசோகச்சக்கரம்” குருதியில் குளித்தது.
“வங்கமாகடல்” தீயினில் கொதித்தது.
“இந்திய வல்லூறு”களின்
கூரிய அலகுகள்,
“ஒலிவ்” தளிர் சுமந்து வந்த
வெள்ளைப் புறாக்களை,
எப்படிக் குதறலாம்?
“கிட்டுவும், குட்டிசிறியும்
எட்டு வேங்கைகளும்”
“வேடந்தாங்கல்” தேடிவந்த,
வெளிநாட்டுப் பறவைகள் அல்ல........
தங்கள் கூடுதிரும்பிய குருவிகள்.
“கோட்சே”கூட,
தன்னை நியாயப்படுத்தினான்;
சிலர் ஏற்றும் கொண்டனர்.
இந்திய அரசே!
முகமூடி இழந்துபோன
உன் ஆதிக்க முகத்தையும்,
அகோரப் பற்களையும்
எந்த முந்தானையால் மூடப்போகிறாய்?
ஆசியக் கடலுக்குள்
அகலக்கால் பரப்ப
உன்னை அனுமதித்தது யார்?
கேட்க யாருமே இல்லையா?
உலகம் எப்போது ஊமையானது?

*வெளிச்சம்*
*மாசி **1993***

# பயணம் தொடர்கிறது

இலக்கை நோக்கி நடக்கத் தொடங்கு.
நீண்ட தொலைவானாலும் நெடுமூச்சு எறியாதே!
என்னால் எப்படி இயலுமென்று,
ஏங்காதே.
எத்தனை யுகங்களானாலும்
இலக்கு உன்னை நோக்கி நகராது;
எனவே,
இலக்கை நோக்கி நடக்கத் தொடங்கு.
புலிகளைப் பார்
பத்தாண்டுகளுக்குள்ளே,
எவ்வளவு தூரம் பாய்ந்து விட்டார்கள்!
கடக்க வேண்டியது நெருப்பாறு என்றார்கள்.
அதற்குள்ளும் துணிந்து காலை வைத்தார்கள்.
பாதிதூரத்தைக் கடந்துபயணம் தொடர்கிறது.
வழியை அடைத்துக் கொண்டு
மலைகள் நின்றன.
போகும் வழியெங்கும் புயலடித்தது.
பேரிடியோடு மழை பொழிந்தது.
எரிமலை உருகிக் கால்களைச் சுட்டது.
என்றாலும்
பாதை பிசகாத பயணம் தொடர்கிறது.
உன்னைப் புலியாக உருவகித்துக் கொள்;
இலக்கை நோக்கி நடக்கத் தொடங்கு!

*வெளிச்சம்*
*மார்கழி 1992*

# குடிநிலம் வேண்டும்

முன்னர்
எம் தாயகத்துக்கு,
ஆடைகட்டி அழகுபார்க்க வந்தசிலர்,
இருந்த கோமணத்தையும் கொண்டு போயினர்.
பின்னர்,
சத்திரசிகிச்சையே சரியெனச் சொன்னவர்கள்
கத்தரிக்கோலையே களவாடிச் சென்றனர்.
"தம்பி" மட்டும் தளராதிருந்தான்;
தன்னுயிர் தாயக விடுதலையென்றான்.
ஒன்று பத்தாக உயிர்ப்புகள் பிறந்தன.
ஒரு தலைமுறையே உணர்வு கொண்டெழுந்தது.
விடுதலைக்காக.........
சக்திக்கு மீறிய விலை கொடுத்து விட்டோம்
இன்னும் இன்னும் கொடுப்போம்.
வேலிகட்டிய மண்ணுக்காகவா
இந்த விலைகொடுப்பு?
இல்லை......
விலங்குகளற்று
கைகள் வீசி நடப்பதற்கும்,
எஜமானர்களின் கட்டளையற்று
வேலை செய்வதற்கும்,
"எழும்பு" என்று யாரும் சொல்லாது
குந்த, ஒரு குடிநிலம் வேண்டும்.
அது தமிழீழம்.

*வெளிச்சம்*
*புரட்டாதி - ஐப்பசி 1992*

# இலக்குத் தவறாது

"பாதை நெடியது;
பயணம் கொடியது
என்றாலும் இவர்கள் இலக்குத்
தவறாது.
தூரம் கொஞ்சம் அதிகம்தான்,
ஆனாலும் கைகளிற் கிட்டாத தொடுவானமல்ல.
தோள்களிற் கிடப்பது சுமையல்ல;
வெளிச்சம் தரும் கருவி
பாதை பிசகாது;
சூரியத் தலைவன் வழிகாட்டி.
இடையில் இருள் வந்தாலும்.......... தளர்ச்சியில்லை;
கைகளில் வெளிச்சம் இருக்கிறது"

*வெளிச்சம்*
*புரட்டாதி - ஐப்பசி 1991*

## புதிய பரணி

ஆயிரம் யானைகள் களத்திடை வீழ்த்திய
அரசனின்மீதே பரணியைப் பாடிடும்
பழைய பழக்கம் தமிழருக்குண்டு,
யானைகள் அற்ற இன்றைய போரில்
எவரின் மீது பரணியைப் பாடுவோம்?
எதிரியைக் குண்டால் எறிந்தே கொல்வோர்
காவல் அரண்களை முதலில் பிடிப்போர்
கவசவாகனம் தகரச் செய்வோர்
வெடிமருந்தேற்றிய வண்டியைச் செலுத்தி
வீரத்தோடு செல்லும் கரும்புலி.........
இவர்கள்மீதே இனிமேல் பரணி
எழுதுவதென்றோர் இலக்கணம் படைப்போம்.

*வெளிச்சம்*
*தை – மாசி 1992*

# தமிழன் வீரம்

சீனத்து "வை–8"க்கு
எங்கள் தினசரிகள் வைத்த பெயர்
"சகடை"
அகல விரித்த சிறகொடும்,
அலறுகின்ற உறுமலுடனும்,
எங்கள் தாயகத்து வான்பரப்பில்
சகடை வரும்;
பெரிய பெரிய "பீப்பாக்குண்டை"
இது பொழியும்;
பின்னர்,
திமிருடன் அசைந்து, அசைந்து போகும்.
நிமிர்ந்து நின்ற வீடுகள்,
கடைகள்,
நிலத்தில் விளைந்த நெல்லும் கீரையும்,
முற்றத்தெழுந்த முல்லை, மல்லிகை,
பத்துவயதுப் பாலன்,
பால்குடி,
ஆடைகட்டி அழகு பார்க்கும்
சின்னப் பெண்கள்,
சகடை போடும் பீப்பாய்க் குண்டினால்
சகதியாகி..........
எல்லாம் அழியும்.
என்னிடமிருந்து எப்படித் தப்புவாய்
என்பதுபோல கண்கள் சிவக்க,
கைகள் துடிக்க,
புலிகள் பார்ப்பர்.
அகல விரித்த சிறகொடு சகடை

அசைந்து, அசைந்து திமிருடன் போகும்.
5-7-92 ஞாயிற்றுக்கிழமை
காலம் வந்தது.
புலிவீரன் காத்திருந்தான்.
சகடை வந்தது.
குத்திக் கொண்டு கீழே வந்து
குண்டைப்போட்டு மீண்டும் நிமிர்கையில்,
வேங்கை கையில் இருந்த கருவி
வெடியைத் தீர்த்தது.
மின்னலும்,
இடியும்,
சேர்ந்த முழக்கம்.
சகடைத் துகள்கள்
நிலத்தில் சொரிந்தன.
தமிழன் வீரம் உலகு புரிந்தது.

*வெளிச்சம்*
*ஆடி - ஆவணி 1992*

## உறுதி

மேகம் தழுவி விளையாடும் உயர்மலைகள்
ஏதுமற்ற தேசம்; என்றாலும்
சிரித்தபடி,
சாவைத்தன் தோள்மீது தாங்கி
எதிரிமுகாம்,
போகும் புலிவீரர் பிறந்த நிலம்
வற்றா அருவி வருட மலர்க்காடு,
சிற்றாடை பூண்டு சிரிக்காத நிலமெனிலும்,
சின்னப்பூவெல்லாம் செருக்களத்தில் நின்றாடி
சன்னப்பூ நெஞ்சில் சாத்தும் தமிழீழம்.
ஆழக் கிணற்றில் நீர்
அள்ளிப் பயிர் வளர்ப்போர்
வாழும் நிலம்.
புதுநெல்லின் வாசனைகள்,
வீசும் காற்றோடு வீசும்.
தூரத்து,
தோட்டக்கிணற்றின் துலாவிருந்து பாட்டுவரும்.
ஆட்டக்காவடியால்........... அதிரும் நிலமிருந்து
புழுதி கிளம்பிப்போய் நிலவை வழிமறிக்கும்
விழுது சுமந்த விருட்சங்கள் குடைபிடித்து,
தூரவழி நடப்போர் தூங்க மடிவிரிக்கும்.
வீரம் விளைந்து விளையாடும் எம்மண்ணில்,
கையளவு அள்ளக் கருதி
எவன் வந்தாலும்,
மெய்யாய் அவன் திரும்பி மீளான்;
இது உறுதி.

*வெளிச்சம்*
*ஆடி 1993*

## இது புலிகளின் பூமி

இது எம்மண்ணின் எல்லை.
இனி உங்கள் பாதம் படுவது
தமிழீழத்தின் புனித மண்ணில்.
இது புலிகளின் பூமி;
நாங்கள் முத்தமிடும் தாயகம்.
கால்களைக் கழுவிய பின்னர் மிதியுங்கள்
எதிரிகள் எவராக இருந்தாலும்
எச்சரிக்கின்றோம்.
உங்களுக்கான புதைகுழிகள்
இங்கே வெட்டப்பட்டுள்ளன.
நண்பர்களை வரவேற்கின்றோம்
எதிரிகளை வெறுக்கின்றோம்.

*வெளிச்சம்*
*பங்குனி – சித்திரை 1992*

# வரிப்புலி பூட்டுகள் உடைத்தது

கோட்டை அதிர்ந்தது! கோட்டை அழிந்தது;
கொடியவர் பாசறை எரிந்தது.
வாட்டிய துன்பம் வடிந்தது; விடுதலை
"வரிப்புலி" பூட்டுகள் உடைத்தது.
வேங்கைகள் பாய்ந்தன; விழுந்தது கோட்டை
வியப்புடன் எழுந்தனர் மக்கள்
தாங்கிய கொடியினைத் "தளபதி" ஏற்றினான்.
தமிழரின் தலைகள் நிமிர்ந்தன.

"என்றுதான் கோட்டையில் ஏறுமோ புலிக்கொடி"
என்றவன் "நினைவுநாள்" அன்று
வென்றனர் புலிகள்; வியத்தகுவீரம்
விளைத்தனர் விடுதலைப் புலிகள்.
வண்ணியும் மன்னார் திருமலை மட்டு
நகரதும் வென்றிடும் தமிழா!
அந்நியர் ஓடி அகலுவர்; வீதியில்
ஆடடா, பாடடா தமிழா!

*ஈழநாதம்*
*26–09–1990*

# அட்டதிக்கும் அதிரும் ஒருவெடி

ஒரேயொரு வெடி தான்,
அட்டதிக்கும் அதிர்ந்து குலுங்கும்.
சரித்திரத்தை தலைகீழாக்கி விட்டு.
சந்தனமேனி காற்றில் கரையும்.
உலகம் ஒருதரம் புருவம் உயர்த்தும்.
வார்த்தை வலைக்குள்ளே சிக்காத தற்கொடை,
எவருக்கும் தெரியாமல் உறங்கும்.
வழியனுப்பி வைத்த விழிகள் கலங்கும்
என்றாலும்,
கண்ணீர்க்கோடு கன்னத்தில் இருக்காது.
சாவுக்கு தேதி குறித்து;
நேரம் கணித்து;
இலக்குநோக்கி நகர எவரால் முடியும்?
வாழ்வு வருடங்களால் மட்டும்,
கணிக்கப்படுவதில்லை.
சங்கை பெறுகின்ற சாவும்,
வாழ்வாகிப் போகும்
ஜுலை ஐந்தாம் தேதி
வருடத்தில் வரும் ஒரு நாளல்ல......
நெல்லியடியில்........ மில்லர் தொடக்கிய
புது வரலாற்றின் பிறந்தநாள்,
தமிழருக்குள் நம்பிக்கை மொட்டவிழ்ந்து
விடுதலை வாசம் வீசத் தொடங்கிய நாள்;
ஊழிக்கூத்தின் அரங்கேற்ற நாள்,
ஆம்.........
அது, கரும்புலிகள் நாள்!

*வெளிச்சம்*
*ஆனி 1993*

## குட்டிச் சுவரே "நினைவுக்க குறிப்பு"

இது கல்லாலும் மண்ணாலும்
கட்டிய சுவர்தான்;
என்றாலும் இரத்தம் கசிகிறது.
விடிவுக்காய் விழுந்த
வேங்கைகள் நினைவுச்
சுவரொட்டி ஒட்டிச் சிவந்த சுவர்முகம்
"வெளிச்சம்" தேடிய வீரரை எண்ணி
கற்சுவர்க்கூடக் கசிந்து வடிகிறது.
இங்கே
குட்டிச் சுவரே "நினைவுக் குறிப்பு";
எங்கள் மண்ணில் எழுந்த மதில்களே
நாளைய பள்ளிச் "சரித்திரப் புத்தகம்!"

*வெளிச்சம்*
*கார்த்திகை – மர்கழி 1991*

# கல்லறை தவழும் காற்றே

கருமேகம்கூடக் கசிந்து, விழிசிந்தும்
கார்த்திகை மாதம்.
நள்ளிரவுப்போதில் நாதமணிச் சத்தம்
கல்லறைக்கு முன்பாக நெய்விளக்குப் பந்தம்.
நெஞ்சத்துணர்வினிலே..... நெக்குருகி..
கண்களிலே ஏங்கும் நீர்க்கோலம்.
“மாவீரர் நாள்”

எம்மண்
திரும்பத் திரும்ப தீக்குளிக்கும் தினம்
“பிடரியில் தட்டி விரட்டி அடிக்கலாம்
தராசுத்தட்டில் நிறுத்தும் வாங்கலாம்”
இப்படி மாற்றான் எண்ணிய தமிழனை
புலியென நினைத்து கிலிகொள வைத்த
“பிள்ளைகள்” நினைவில் உருகிடும் நாளிது.
கல்லறை தழுவும் காற்றே வருக!
காவிய நாயகர் மூச்சைத் தருக!

*வெளிச்சம்*
*கார்த்திகை 1992*

# அலைவந்து தாலாட்டும் சிறுதீவு

அலைவந்து தாலாட்டும் சிறுதீவு - நாளை
அதில்ரண்டு நாடுகள் இதுதீர்வு
வலைகொண்டு போகிறான் படகோடு - இவன்
வரலாறு காணுவான் திடமோடு.
கடல்வேங்கை எழுந்திட்ட தமிழீழம் - இனிக்
கனவாகிப் போகாது ஒரு நாளும்.
படகேறிப் பலநாடு வென்றவா - புலிப்
படையோடு ஒன்றாகி இன்று வா!

*வெளிச்சம்*
*வைகாசி – ஆனி 1992*

# பூகம்பத்துக்குப் புதுப்பெயர்

அகராதியில் அழித்தெழுதிக் கொள்ளுங்கள்,
"பூபதி" அம்மா........
ஒரு பெண்ணின் பெயரல்ல.....
பூகம்பத்துக்குப் புதுப்பெயர்.
இவள்,
காலக்குரலுக்கு
சேலை கட்டிய தோற்றம்.
ஊரெங்கும் ஓநாய்கள்
ஊளையிட்ட போது,
தன்னந்தனியனாகத் தடியெடுத்து விரட்டியவள்.
எமது சுற்றுப்புறச் சூழலை
அந்நியக்காற்று அசுத்தப்படுத்திய போது,
ஊத்தைக்காற்றின் உரிமையாளர் மீது,
வழக்குத் தொடுத்து வாதிட்டவள்.
இங்கு அதிகமானோர் மௌனித்திருந்தபோது,
"புலிகள் எங்கள் பிள்ளைகள்
அவர்களே எங்கள் பாதுகாவலர்கள்"
என்று
வாய்திறந்து பாடிய விடுதலைக்குயில்.
சக்தி,
வலுப்பொருள் –
விஞ்ஞானம் இப்படி விதந்துரைக்கிறது.
சக்தி,
தாய்மையின் வடிவம் –
மெஞ்ஞானம் இப்படி முழக்கமிடுகின்றது
எப்படிப் பார்த்தாலும்
பூபதி அம்மா, பூரண வடிவம்!

*வெளிச்சம்*
*சித்திரை 1993*

# கால்கள் நசித்த கனகாம்பரங்கள்

என்ன இது?
எங்கே இருந்த எலும்புக்கூடுகள்?
"ஆதிச்ச நல்லூரில்" அகப்பட்ட பொருட்களா?
"ஹிட்லர்வதைமுகாம்" கிடங்கில் இருந்ததா?
அப்படியாயின் அதிசயம் இல்லையே!
இது,
ஆயிரம் வேட்டைப் பற்களும்,
அங்கையில் குருதிக்கலயமும்,
கண்களில் மலப்பீழைவழிய
கழுத்தினில் மனிதக்குடல்மாலையும்
சூடிக்கொண்டு இங்கே வந்த,
பேய்கள் தின்று போட்ட எச்சம்.
பக்கத்துவீட்டு வேலிக்குள் வந்து
பாரதம் வைத்த "மனிதப்படையல்"
இமயமலையும் குமரிமுனையும்
எல்லைகளான "இந்தியதேசம்"
இங்கே ஆடிய நரபலிக்கூத்தில்
பட்டைஉரித்துக் காய்ந்த வேர்களாய்,
தசைகள் இழந்த தமிழர் எலும்புகள்.
கங்கைபாயும் புண்ணிய மண்ணின்
கால்கள் நசித்த "கனகாம்பரங்கள்"
கபிலவஸ்து,
போர்பந்தர்,
ஆனந்த பவனம்-
இங்கேயிருந்துதானாம்
சாந்தி, சமாதானம், பஞ்சசீலம்
உலகமெங்கும் உலாவரப் போனதாம்!
தூ!........எச்சிலால் அந்த எழுத்தை அழிப்போம்!

*வெளிச்சம்*
*வைகாசி 1993*

# ஊமைநிலவும் உப்பளக்காற்றும் உன்னை அறியும்

ஆனையிறவும்
வெற்றிலைக்கேணியும்
அடுத்தடுத்திருந்த காவலரண்களும்
ஊமைநிலவும் உப்பளக்காற்றும்
உன்னை அறியும்.
களத்தில் நீ புலியாக மட்டுமல்ல
புயலாகவும் நின்றாய்
நீ போராடியதை நான் பார்க்கவில்லை
"வோக்கிடோக்கி"யில்
உன் குரலைக் கேட்டேன்
பிறந்த பலனை என் செவிகள் பெற்றன.
நீயும் உன் தோழர்களும் புகும்வரை
எதிரி பாடிக்கொண்டுதான் இருந்தான்
இப்பொழுது ஓடிக் கொண்டிருக்கிறான்
ஈராக் மீது தொடுத்த போரில்
சவுதியில் நின்று படைகள் நடத்திய
அமெரிக்கத் தளபதி யாரெனக் கேட்டால்.....
உலகம் அவனின் பெயரைச் சொல்லும்,
ஆனையிறவு உப்பள முகாமின்
உள்ளே புகுந்த புலிகளின் பெயரை
சொல்லுக என்றால்,
எத்தனை பேர்கள் எடுத்துரைப்பார்கள்?
பரவாயில்லை,

பேர்வரும் என்றா புலிகள் விழுந்தனர்?
இல்லையே,
ஆனையிறவும்
வெற்றிலைக் கேணியும்
அடுத்தடுத் திருந்த காவலரண்களும்
ஊமைநிலவும் உப்பளக் காற்றும்
உன்னை அறியும்!

*வெளிச்சம்*
*தை – மாசி 1992*

# இரண்டு வேனிற் காலம்

சென்ற வருடம்
வேனிற் காலத்தில்
முதுகில் எனக்கு வேர்க்குரு போட்டது
நிழலாய் நின்ற தோழனைக் கேட்டேன்
இதமாய் வேர்க்குரு உடைத்தே விட்டான்
இந்த வருடமும் வேனிற்காலம்
மீண்டும் வேர்க்குரு
நிழல் பக்கத்தில்தான் நின்றது
கேட்கத்தான் முடியவில்லை
எதிரியின் பாசறை
எரியிடும் சமரில்
இரண்டு கைகளையும் இழந்து நின்றான்
எப்படிக் கேட்பேன்?
வேர்க்குரு இப்போ முதுகில் அல்ல-
இதயத்தில்!

*விடுதலைப் புலிகள்*
*மாசி 1992*

# நிலாக்கால நினைவும் நெடுமூச்சும்

எங்கள் மண் வரண்டு
எழிலிழந்து கிடக்கிறது.
பொங்கும் நிலாக் கூடப்
பொழியும்; குளிராது.
தென்றல் வரும்; வீசும்
தேசம் சிரியாது.
என்றிவைகள் மீண்டும்
இதமாகும் தெரியாது.

மண்ணுக்கு பொட்டிட்ட மாதிரியாய்
புதைகுழிகள்
எண்ணுக் கணக்கின்றி எழுகின்ற பூமியிது.
இன்னும் புதைகுழிகள் எழும்;
புலிவீரர்
கண்ணுக்குத் தமிழீழம் காட்சிதரும் வரையில்
இன்னும் புதைகுழிகள் எழும்.

ஏனென்றால்.......
கொல்லைக்குள் வந்த குரங்கை எதிர்த்து நின்று
எல்லைக்கு அப்பால் எறிந்து கலைத்து விட்டோம்
வந்திங்கு ஆதிக்க வலையை விரித்தவரை
நிந்தித்தோம்;
நாங்கள் நிர்மூலம் செய்து விட்டோம்.
ஆனாலும் எல்லாமும் ஆச்சா....... இல்லைப்பார்!
மானாகி விட்டதா மதயானை........? இல்லைப்பார்!

கவனம்....... இனித்தானே பயணம் இருக்கிறது
கவனம்....... இனித்தானே கதையே தொடங்குகிறது.
வாருங்கள் ஒன்றாக வடம் பிடிப்போம்.
போராட்டத்
தேரை இழுத்தெங்கள் தேசத்தை விடுவிப்போம்.

மண்ணுக்குப் பொட்டிட்ட மாதிரியாய்
புதைகுழிகள்
எண்ணுக் கணக்கின்றி எழுகின்ற பூமியிது.
இன்னும் புதைகுழிகள் எழும்;
புலிவீரர்
கண்ணுக்கு தமிழீழம் காட்சிதரும் வரையில்
இன்னும் புதைகுழிகள் எழும்!

*விடுதலைப் புலிகள்*
*ஆனி 1990*

# நெருப்பு நீரில் நீந்தும் தாயகம்

மெல்லெனச் சிவந்தது கீழ்த்திசை வானம்
மேனியைத் தொட்டது சீதளக் காற்று
நெல்வயல் எங்கணும் அசைந்தன பயிர்கள்
நீர் நிலை யாவிலும் குதித்தன மீன்கள்
கல்லென நீதுயில் கொள்ளலும் தகுமோ?
கரும்புலி வீரரின் காவியம் விழுமோ?
இல்லையென் றாயிரம் வீரர்கள் எழுந்தார்
இளையவரே! பள்ளி எழுந்திடுவீரே!

போற்றி எம் தமிழெனும் காவியப் பொருளே;
புலர்ந்தது புதியதோர் நாளெனும் பொழுதே,
காற்றிடை மரமெனச் சுழன்ற நம்வாழ்வு
கழிந்தது, குண்டுகள் பாய்ந்திடும் தேசம்
நேற்றொடு போனது நிமிர்ந்தது நெஞ்சம்
நேரெதிர் கொண்டுமே பாய்ந்தது வேங்கை
ஏற்றிய புலிக்கொடி எழுந்தது காற்றில்
இளையவரே பள்ளி எழுந்திடுவீரே!

இந்த மண்ணும் மண்ணுள யாவையும்
இனிய வானமும் எங்களின் பரம்பரைச்
சொந்தமாகுமாம் அப்புவும் ஆச்சியும்
சேர்ந்து மகிழ்ந்த பூமியிப் பூமியாம்
சந்தமார் கவி பாடித் திரிந்ததும்
சபைகள் யாவுமே தமிழிற் திளைத்ததும்
விந்தை யாயிரம் செய்து உயர்ந்ததும்
வேறிடத்திலா? இல்லையிப் பூமியே !

நெல் விளைந்து சரிந்து கிடந்ததும்
நீள நின்று நாம் புதிரெடுத்ததும்
புல் வெளிகளில் மாடுகள் மேய்த்ததும்
புதுப் பொலிவுடன் பள்ளிக்குப் போனதும்
வல்லை வெளியினைத் தாண்டி, மகிழ்வுடன்
வண்டியில் ஏறிச் சன்னதி சென்றதும்
ஷெல் விழுந்திடாக் காலப் பகுதியில்
செய்து மகிழ்ந்த பூமியிப் பூமியாம்.

தென்றல் மேனியைத் தீண்டி மகிழ்ந்ததும்
தேக வியர்வை சொரிந்து உயர்ந்ததும்
கன்றுபோல நாம் ஓடித் திரிந்ததும்
காதல் செய்து உருகிக் கிடந்ததும்
நன்று நன்றென விடியும் வரையிலும்
நாலு கோவில் திருவிழா பார்த்ததும்
நின்று போனது; எங்களின் தாயகம்
நெருப்பு நீரிலே நீந்திக் கிடக்குது!

*களத்திலே மலர்ந்தவை*
*1988*

# அந்நியமானவர்கள்

காருறங்கலாம் காற்றுறங்கலாம்
காதலர்விழி தானுறங்கலாம்
ஊருறங்கலாம்; மண்டைதீவினை
உற்று நோக்கிடும் விழியுறங்குமா?
நீரிறங்கிடாக் கற்தரைப் பூமியில்
நிச்சயம் ஒரு சாதனை தானிது
ஏரிறங்கிடாப் பூமியில் உண்மையில்
எழுத வேண்டிய காவியம் தானிது.

மண்ணை மீட்டிடும் எங்களின் தங்கைகள்
மண்டை தீவினை நோக்கி விழித்தனர்
கண்ணயர்ந்திடாச் சிற்சிலர் பலாலியைக்
காத்து வேர்த்தனர் ஆயினும் பற்பலர்
பொன்னணிந்தனர் பட்டுகள் சூடினர்
போய்க் கடைகளில் ஐஸ்பழம் சூப்பினர்
விண்ணிடிந்து விழுந்திடும் போதிலும்
வீடியோவிலே....... படங்கள் பார்த்தனர்.

எங்கள் பூமியை மீளவே பெற்றிடல்
என்ற லட்சியம் ஏறிய வேங்கைகள்
தங்கள் உயிர்களைச் சாவுக் களித்தனர்
தாவிவரும் பகையோடு பொருதினர்
இங்கு பற்பலர் பேசிக் கழித்தனர்
ஈழம் எரிகையில் ஓடிப் பறந்தனர்
சங்க மாடிய தமிழெனப் பேசிய
தம்பி மாரெல்லாம் கடலைக் கடந்தனர்.

பெற்ற தாயினை எட்டி உதைப்பது
போலத் தாயகம் தீயில் எரிகையில்
விட்டு விமானத்தில் ஏறிப் பறந்தவர்
வீரமில்லாதவர் நாயிலும் கீழவர்
சுற்றி வளைத்தனர் சிங்களப்படையினர்
சுட்டுத் தள்ளுவர் என்ற பயத்தினால்
விட்டுப்பறந்த கோழைகள் நாளையே
வீடு திரும்பினால்.... காறியே துப்புவோம்.

கப்பலேறி ஜேர்மன், பிரான்சுடன்
கனடா நாட்டிலும் தஞ்சம் புகுந்தனர்
அப்பு ஆச்சியைக் கவனம் கவனமென்
றங்கிருந்துமே கடிதம் எழுதினர்
தப்பிப் பறந்தவர் தம்பியும் வாவெனத்
தம்பிமாரையும் அங்கு அழைத்தனர்
துப்பு கெட்டவர் அகதி லேபலில்
தூசி தட்டியே காசு உழைப்பவர்.

*களத்தில் மலர்ந்தவை*
*1988*

# எழுக! புதிய வாழ்வு சமைக்கலாம்

அன்னை தந்தையென் றெங்கள் பரம்பரை
அகமகிழ்ந்தயிப் பூமியில் எத்தனை
இன்னல் வந்து இழிநிலை யுற்றனம்
இழவுவீடுபோல் துயர்களுற்றனம்
வண்ண வண்ணக் கனவுபோய் எங்களின்
வாசலெங்கணும் வறுமை யுற்றனம்
என்ன இன்றுமா உறக்கம் தமிழரே?
எழுக புதியதோர் வாழ்வு சமைக்கலாம்!

நிலவு பார்த்து மகிழ்ந்த வானிலே...
நின்று கொண்டவன் குண்டை எறிகிறான்
புலவு, சேனை, வயல், கடல் எங்குமே
புதைத்த குண்டினால் தமிழரைக் கொல்கிறான்
இழவு வீடதா எங்களின் தாயகம்?
இல்லையென்று எழுந்து வா தமிழனே!
அழகு பூமியெம் தாயக மண்ணடா
அதையழிப்பவன் யாரடா? கேளடா!

காற்றிலேறி விண்ணையே சாடிடும்
காலம் வாழ்ந்திடும் ஈழத் தமிழினம்
'சோற்றுக்காகச் சுதந்திரம் விற்றவர்
சோம்பிக் கிடந்தவர்' என்ற பழிச்சொல்லை
ஏற்றுத் தமிழனே இழிநிலை கொள்வியா?
இல்லையென்று நீ எழுந்து வருவியா?

நேற்று வாழ்ந்த தமிழன் நிலையினை
நினைத்துப் பார்த்து நிமிர்ந்துகொள் தமிழனே!

வீடுமட்டுமா போனது? எங்களின்
வீதிகூடப் பகையிடம் போனது!
ஓடுகின்ற நேர்வழி போனதும்
ஓமடா ஆனையிறவது போனதும்
காடுமேடுகள் தடவினாய்! பூநகரிக்
கடலைக் கடக்கப் படகினைத் தேடினாய்
பாடுபட்டுக் கடக்கப் பழகிடப்
படகும் போனது, பாதையும் போனது!

பாதைபோனதும் கொம்படிப் பாதையில்
பற்றுவைத்திடப் பார்க்கிறாய், ஊரியான்
பாதை தன்னிலே பயணம் தொடர்கிறாய்
பாவிகள் என யாரை நீ திட்டிறாய்?
வேதனைகளை வென்றிட எண்ணிடாய்
வேலையில்லையிப் புலிகளுக் கென்றுநீ
ஓதமட்டும் உயிர்க்கிறாய், மீண்டும் போய்
உறங்கிக் கிடந்து உணர்வை இழக்கிறாய்!

கொட்டுகின்ற மழையிலும் பனியிலும்
கோடை நாட்களில் புழுதி மணலிலும்
நட்ட கல்லெனக் காவல் அரணிலே...
நாலுபக்கமும் பார்த்து விழியிமை
கொட்டிடாதொரு வீரன் இருப்பதைக்
குறித்து ஓர்கவி பாடிடாது, கைத்

தட்டல் வாங்கிட எழுதிடும் பேனையைத்
தணலிட்டுக் கொளுத்தி எரிக்கலாம்!

எதிரிபாடிய பாசறைக்குள் வெடி
ஏற்றி நிறைத்த வண்டியை ஓட்டியே
புதியதானதோர் சரிதம் படைத்திடும்
புலிகள் மீதிலோர் பரணியைப் பாடிடா
விதியை வரித்துள வீணையைத் தூக்கியே
வீதி தன்னிலே....... வீசியும் எறியலாம்
அதிகமேன், புலிவீரத்தைப் பாடிடா
ஆருளர் அவர் ஏனுளர் என்னலாம்!

# தலைமுறை இடைவெளிக்குள்

துப்பாக்கியோடு திரிகின்ற சிறுவனே!
பக்கத்தில் வா!
உனக்கு வயது பதின்நான்கா
பதினைந்தா?
எத்தனையாக இருந்தாலும்
மகனே! அருகில் வா
உன் பாதத்தைக் காட்டு
தூசி படிந்த கால்களை
சேவிக்க விரும்புகின்றேன்.

‘புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்’
காலையில் சத்தியப்பிரமாணம்
செய்யும் போது
இந்த மந்திரச் சொல்லை
விசுவாசிப்பதாகக் கூறுகின்றாயே!
இந்த வேத மந்திரம்
உன்னை மலைபோல் நிமிர்த்துகின்றது.

உனக்குத் துப்பாக்கிதூக்கும் வயதல்ல
வாய்ப்பாடு பாடமாக்கும் வயது.
என்றாலும் நீ நடக்கும்போது
அட்டதிக்குகளும் அதிர்கின்றதே!

நீ மூச்சு விடும் போது...
புயலொன்று புறப்படுகின்றதே!
உன்னைப் பார்க்கும்போது
எனக்குப் பெருமையாக இருக்கிறது;
பொறாமையாகவும் இருக்கிறதே!

உன் வயதில் நானென்ன சாதித்தேன்
ஒன்றுமில்லை...
ஒன்றுமேயில்லை.
கிட்டி அடித்தேன்
கிளித்தட்டு மறித்தேன்
வெள்ளையப்பாவீட்டு விளாத்திக்குக்
கல்லெறிந்தேன்.

நீயோ
கையில் துவக்கேந்தி
களத்திலே நிற்கின்றாய்
கொட்டும் மழையினிலும்
குறிபார்த்து நிற்கின்றாய்
தூங்காத விழியோடு 'சென்றி'க்கு நிற்கின்றாய்.

உன்பாதத்தைக் காட்டு
கால்களை முத்தமிட
கவிஞன் விரும்புகிறேன்

நீயும் உன் போன்ற புலிகளும்
களத்தில் உலாவரும் காலம் வரை
உலகத்துப் படையெல்லாம்
ஒன்றாய் எதிர்க்கிலும்
வேங்கைகள் பாய்ந்து....
வெற்றி கொள்ளும்.

*உணர்வு*
*தை1990*

# கல்லறையிலும் பூக்கள் மலரும்

வீசுகின்ற காற்று அடிமையா?
விரிந்து கொள்ளும் பூக்கள் அடிமையா?
மூசி மூசிக் கரைகளை நாளுமே
முத்தம் செய்யும் அலைகள் அடிமையா?
இல்லையே; தமிழ் ஈழத்து மண்ணிலே....
இருக்கும் தமிழனேன் அடிமையென்றாகணும் ;
தொல்லைகள் துயர் ஏன்பட வேண்டுமாம்?
துணிந்து நின்றிடில் வெற்றி பிறக்குமாம்.

அடிமையாகிக் குனிந்து நிமிரவோ
அன்றிக் கோழையாய் வாழவோ விரும்பிலேன்.
உரிமையோடு என் தாயகப் பூமியில்
உலவுகின்ற நாள் வரும் என்றுமே
எதிரியின் வரவையெதிர் பார்த்துமே
இந்தச் 'சென்றி'யில் காவல் இருக்கின்றேன்.
இருளிற் கிடப்பது எதிரியின் 'பாசறை'
இடது கரை அவன் 'காவல் அரண்களாம்'
அவனைச் சுற்றியோ பெரிய 'அகழிகள்'
எங்கள் மண்ணிலே எதிரியின் சுவடுகள்
என்ற பின்னரும் பள்ளியில் படித்திடத்
தங்கவில்லையே என் மனம்; ஆதலால்
தமிழர் தாயகம் காண எழுந்துள்ளேன்.

குண்டு வீசும் கழுகுகள் வந்தெமைக்
குதறிக் கொல்லலாம்; காவல் அரணிலே
நின்று கொள்ளும் வேளையில் எங்களை
எதிரி குண்டுகள் வீசிச் சரிக்கலாம்.
என்கரத்திலே.... இருக்கும் துவக்குகள்
இளந்தலைமுறைக் கைகளில் ஏறிடும்.
என்னைக் கொல்லலாம்; ஆயினும் 'விடுதலை'
என்ற மந்திர வார்த்தை அழியுமோ?

நாங்கள் ஓடித் திரிந்த மண்ணிலே...
நாறுகின்ற பிணங்களாய் வீழ்வதா?
தூங்கித் தூங்கிப் பொழுதைக் கழிப்பதா?
சோற்றுமாடுகள் போலத் திரிவதா?
நெஞ்சில் குண்டுகள் தாங்கி மடிவதும்
நேரெதிராகவே எதிரியின் பாசறை
அஞ்சிப் பகைவர்கள் ஆடப் புகுந்தொரு
அனலை மூட்டுதல்...... புலிகள் சரித்திரம்.

என்னை மீறி எதிரி வருவனா?
எதிரியென்ன என்னிலும் பெரியனா?
'சின்னச் சின்னப் பையன்கள்' என்றுமே
சிரித்த இந்திய இராணுவம் எங்களின்
'கண்ணி வெடியிலே' ........ காலை இழந்தது;
கப்பலேறிக் கடலைக் கடந்தது.
விண்ணைக் கூட இடித்து விழுத்திடும்
வீரம் கொண்டது வேங்கைகள் கூட்டமாம்.

நாளையே தமிழ் ஈழம் பிறந்திடும்
நானிலை எனும் போதிலும்; என் தமிழ்க்
காளையொருவன் புலிக்கொடி கட்டுவான்
காற்றில் அக்கொடி உயரப் பறந்திடும்
பூக்கள் வைத்து என் கல்லறை மீதிலே...
ஏக்கமின்றி அக்கணப் போதிலே...
எழுந்து நின்று அஞ்சலி செய்குவர்!

*விடுதலைப்புலிகள்*
*ஆடி 1990*

# இது பாட முடியாத பரணி

எத்தனை எத்தனை இளமைகள் போயின;
எத்தனை எத்தனை இனிமைகள் போயின!
காதல் வலையினிலே.... கருத்தழியும் வயதினிலே....
சாதல் வலைவிரித்துச்
சாப்பிட்ட தெத்தனையோ?
தாலாட்டி
முத்தமிட்டு
தடுக்கினிலே... சீராட்டி,
பாலூட்டி வளர்த்த பாசமுகம் பாராமல்
அன்னை முகம் பாராமல்
தந்தை முகம் பாராமல்
சின்ன உடலங்கள் தெருவினிலே கிடந்ததுண்டு.
செருக்களத்தில்
மாற்றார் சிரமறுக்கும் போதினிலே...
உருக்குலைந்து போன உடலங்கள் எத்தனை தான்!
'கண்ணிவெடி' வைக்கும்
களப்பலியில் எத்தனையோ
பொன்னுடலம் இந்தப் பூமியிலே சாய்ந்ததுண்டு.
'களத்தில்' மடியாமல்
கடற்பேய்கள் தின்பதற்காய்
வள்ளத்தோ டெரிந்த
வரலாறு எத்தனை தான்!
வென்றாக வேண்டும் விடுதலையை
என்றவொரு
ஆதங்கத்தோடு கடல் ஆடிவந்த படகினிலே...
வேதங்களான விடுதலைத்தீ புஷ்பங்கள்
கடலின் மடியினிலே... கண்மறைந்து போனதுண்டு;

உடலும் நாம் பார்க்காது
உருக்குலைந்து போனதுண்டு!
யூ.கேக்குச் செல்ல
யூ.ரி.ஏ. ஏறாமல்
ஏ.கேயைத் தூக்கி இறந்தவர்கள் எத்தனை பேர்?
சின்னவயதினிலே....
கன்னியரின் பின்னாலே... காற்தடங்கள் பதித்திருந்தோம்
பின்னல் அசைவினிலே... பேதலித்துப் போயிருந்தோம்
ஓரவிழிப்பார்வை ஒன்றுக்காய்
நாள் முழுவதும்
ஊரெல்லாம் நாங்கள் ஊர்வலங்கள் போயிருந்தோம்
கைபிடித்தோம்
கால் பிடித்தோம்
காதலென்ற எண்ணமதில்
மெய் தழுவ நாங்கள்
மேய்ச்சலிட்ட இளம் வயதில்
முற்றும் துறந்த முனிவரைப் போல்
நாட்டுக்காய்ச்
செத்தவரைக் கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள்
பட்டப் படிப்புகளைப் பலிகொடுத்து விட்டிங்கே
கொட்டும் மழையினிலும்
குளிர்காலப் பனியினிலும்
நித்திரையின்றி நெடும் போர் புரிந்து விட்டுச்
செத்தவரைக் கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள்.
கடலில் மடிந்தார்கள்
காட்டிடையே செத்தார்கள்
படகோடெரிந்தார்கள்
பாலமுத வாயாலே
'குப்பி' அடித்தார்கள்

குண்டணைத்துப் போனார்கள்
தப்போம் என நினைத்துச் 'சயனைட்' குடித்தார்கள்
என்னால் முடியாது
இவர்களை நான் பாடுதற்குள்
கண்ணால் வழிவதையென் கைதுடைக்க முடியாது.
வார்த்தைகளைத் தேடி வலம் வந்த போதினிலும்
போர்த்தேரேறிய,
எம் புனிதர்களைப் பாடுதற்கு
வார்த்தை கிடைக்கவில்லை;
வரிகளொன்றும் தோன்றவில்லை.
என்னவென்று சொல்லி,
எப்படித்தான் எழுதிடுவேன்?
என்னால் முடியாது;
இவர்களை நான் பாடுதற்குள்,
கண்ணால் வழிவதையென் கைதுடைக்க முடியாது.
என்னால் முடியாது
இது –
பாடமுடியாத பரணி!

*ஈழமுரசு*
*08.03.1987*

# தணலில் வேகாச் சந்தன மேனிகள்

பூவிரிந்தது போலச் சிரித்ததும்
போர் முகத்திலே... போய்த் திரிந்ததும்
சாவிழுங்கிய சரித்திரம் ஆகுமோ
சந்தம் வழிந்த கவிதை கிழியுமோ?
எங்கள் வானிலே எழுந்த கதிரவன்
இன்று விழுந்து இருளில் மறையுமோ
தங்கமேனியைத் தீக்கதிர் சூழுமோ
தணலில் வேகுமோ சாம்பலும் பூக்குமோ?

நீங்கள் வரிந்து கட்டிய கச்சைகள்
நிலை குலைந்துமே நிலத்திடை வீழுமோ?
நீர் திரிந்த பூமி அழியுமோ?
நீர் எரிந்த மேடு சூடாறுமோ?
புல்முளைக்குமோ பேச்சுடன் போகுமோ?
போர்க்களத்திலே புலிப்படை தோற்குமோ?
இல்லையென்று பல்லாயிரம் வேங்கைகள்
எழுந்து நிற்பது உமக்குத் தெரியுமோ?

காடுமேடுகள் என்று திரிந்தவர்
கண்ணிவெடியிலோர் சாதனை செய்தவர்
பாடுகின்ற சுதந்திரப் பறவையைப்
பார்த்து வானிலே சிறகை விரித்தவர்
நாடு வேண்டியோர் யாகம் புரிந்தவர்
ரத்த வேள்வியில் ஆகுதியானவர்
வீடுவாசலை விட்டுமே வந்தவர்
வேங்கையாகி எம் வேதனை தீர்த்தவர்....

இன்று தீயிலே வெந்து முடிவரோ!
இல்லை, ஆயிரம் பேரெனப் பூமியில்
வந்து வந்து மறுபிறப் பெய்துவர்
வலிமை சேர்ந்திடப் பாலெமக் கூட்டுவர்
வென்று நாமொரு காவியம் பாடிடும்
வேளை வந்திடும் போதிலே மீண்டுமோர்
கன்றெனத் தமிழ் ஈழத்து மண்ணிலே
கண்திறந்திடக் காத்திருக்கின்றனர்!

*களத்தில் மலர்ந்தவை*
*1989*

# விழிகளில் நெருப்பினை மூட்டு

ஒருமுறை விழிகளில் நெருப்பினை மூட்டு
உலகத் திசைகளி லேமுகம் காட்டு
புலிகள் சேனையில் போய் நிமிர்ந்தாடு
புலரும் வேளைபூ பாளங்கள் பாடு.

கரும்புலி கடற்புலி பெரும்புலி ஆகி
களத்தில் எங்கணு மேநிலை ஆகி
பெருமை யோடவர் போவதைப் பாரு
பிரபா கரனெனும் வீரனைச் சேரு.

எதிரிகள் பாசறை எரித்திட வென்று
எழுந்து மேவர வேண்டுமே யின்று
விதியினை மாற்றிட புலியென ஆகு
விடுதலைக் கேயுயிர் கொடுத்துடல் வேகு

தலைவனின் வழியினில் அணிவகுத் தாடு
தம்பி ஆனவனைத் தினம் பாடு
மலையென நிமிர்ந்தவன் புகழினைக் கூறு
மலரும் ஈழத்தில் காவடி ஆடு.

# கல்லறை அற்ற காவியங்கள்

வேர்கள் வெளியினிற் தெரிவதில்லை – சில
வேங்கைகள் முகவரி அறிவதில்லை
பேர்களைச் சொல்லவும் முடிவதில்லை – கரும்
புலிகளின் கல்லறை வெளியிலில்லை.

காலப் பெருவெளி நீளும் பொழுதிலும்
கண்ணில் தெரிவதும் இல்லை – இங்கு
வாழும் தலைமுறை சாகும் கரும்புலி
வாழ்வை அறிவதும் இல்லை
வாழ்வை அறிவதும் இல்லை – அவர்
வாசம் புரிவதும் இல்லை.

கட்டி அணைத்தொரு முத்தம் அளித்துமே
கைகள் அசைத்திட்டுப் போவார் – ஒரு
தொட்டில் வளர்ந்தவர் தோளில் சுமந்தவர்
சொல்லிப் புறப்பட்டுப் போவார்
சொல்லிப் புறப்பட்டுப் போவார் – எங்கள்
தோழர் நெருப்பென ஆவார்.

நொடியில் ஒரு பெரு வெடியுடன் கரும்புலி
நெருப்புடன் சங்கமமாகும் – எங்கள்
விடிவினுக்காகவே இடியென எதிரியின்
முடிவுடன் அவருடல் சாயும்
முடிவுடன் அவருடல் சாயும் – அவர்
மூச்சும் பெரும் புயலாகும்.

# பூகம்பம் ஆரம்பம்

பூவிழி தீசுமந்தாடட்டும் – இங்கு
பூகம்பம் ஆரம்பம் ஆகட்டும்
விலங்குக ளோடிங்கு கலங்குவதோ? தமிழ்
வீரத்தின் விளைநிலம் உறங்குவதோ?

எழுகவே! தமிழரே! எழுகவே!
புலிகளின் அணியிலே வருகவே!

அன்னை தந்தை வாழ்ந்ததிந்த நாடு – அவர்
அப்பு ஆச்சி கூட வாழ்ந்த வீடு
அன்புத் தங்கை கோலம் போட்ட முற்றம் – இதை
ஆளவேண்டும் என்ப தென்ன குற்றம்?

எழுகவே! தமிழரே! எழுகவே!
புலிகளின் அணியிலே வருகவே!

சோற்றுக்காக வாழ்வதிங்கு கேடு – இனிச்
சுதந்திரத்தைத் தேடி நின்று பாடு
ஆற்றுவெள்ளம் போலெழுந்து ஓடு – களம்
ஆடிவெற்றி கண்ட பின்னர் ஆடு.

எழுகவே! தமிழரே! எழுகவே!
புலிகளின் அணியிலே வருகவே!

உலகம் போற்றும் தலைவனுண்டு வருகவே – எங்கள்
உரிமை மீட்க உங்கள் பங்கைத் தருகவே
விலகியோடல் வீரமல்ல அறிகவே – உங்கள்
வீரம்எதிரி காணவேண்டும் எழுகவே!

எழுகவே! தமிழரே! எழுகவே!
புலிகளின் அணியிலே வருகவே!

# தாயகம் வந்தது கும்மியடி

சுற்றிவரக் கடல் முத்தமிடும் – எங்கும்
சுந்தரப் பூங்காற்று சத்தமிடும்
கொள்ளையழகடி எங்கள் தமிழீழம்
கொட்டுங்கடி ஒரு வட்டக் கும்மி.

மட்டக்களப்புடன் யாழ்ப்பாணம் – வன்னி
மன்னார் திருமலை எம்தேசம்
சுட்டுப் பொசுக்கியே எம்மை அழித்திடும்
சூழ்ச்சி பலிக்காது கும்மியடி.

சாதிமதங்கள் எமக்கில்லை – மூடச்
சாத்திரம் என்பதும் இங்கில்லை
தாவும் புலிகளின் தாகம் தணிந்திடும்
தாயகம் வந்தது கும்மியடி

பாயும் புலிகளின் தேசமடி – பிர
பாகரன் எங்களின் வீரனடி
பூவும் எழுந்திங்கு போர்க்களம் போகின்ற
பூகம்ப நாடென்று கும்மியடி.

தாமரைப் பூவினால் மாலைகட்டி – எங்கள்
தாயகப் பூமிக்குச் சாத்துங்கடி
பாமழையால் நிலம் பண்பட்டுப் போகவே
பாடியே கும்மிகள் கொட்டுங்கடி.

## மேனி சிலிர்க்கும் எங்கள் தாயகம்

இந்து சமுத்திரம் தந்திடும் முத்தங்கள்
ஏற்று மகிழ்வது எம்நாடு
சந்ததமும் கவிச் சிந்துகள் பாடிடச்
சங்கு முழங்குவ தெம் நாடு.

தென்றல் தழுவிடும் செவ்வந்திப் பூவிலே....
தேன்குடித் தாடுவ தெம்நாடு
கன்றுகள் தாய்மடி கண்டதும் பாலெலாம்
கால்வழி யோடுவ தெம்நாடு.

முத்துவிளைவதும் உப்புவிளைவதும்
மூங்கில் வளர்வதும் எம்நாடு
கத்தும் குருவிகள் கானம் இசைத்திட
களனி விளைவது எம்நாடு.

ஈழத் தமிழ் நிலம் வாழத் தமதுயிர்
இங்கு கொடுப்பது எம்நாடு
மேளம், உடுக்குடன் ஆடும் கரகத்தால்
மேனி சிலிர்ப்பது எம்நாடு.

பூங்குயில் பாடிடும் பூமிசமைத்திடப்
புலிகள் பிறந்தது எம்நாடு
வேங்கை எதிரிகள் பாசறை தேடியே
வீறுடன் பாய்வது எம்நாடு.

## செஞ்சோலைக் கீதம்

சீர்பல ஏந்திநம் சிந்தையில் நிறைந்திடும்
செர் நமி ழீழத்துச் செஞ்சோலை
வேரிடை யூறிய நீரென எங்களின்
வீடென ஆகிய செஞ்சோலை

வாழ்க! வாழ்க! வாழ்க!
வாழிய, வாழிய, வாழியவே!

உலகிடை மேவிய கலைகளின் தலமென
உயர்ந்தது எங்களின் செஞ்சோலை
நலந்தரு புதுமைகள் நல்லவிஞ் ஞானங்கள்
நாம்பெறும் ஆலயம் செஞ்சோலை

வாழ்க! வாழ்க! வாழ்க!
வாழிய, வாழிய, வாழியவே!

அன்பொடு கருணையில் அடுத்தவர் நலத்தினில்
ஆழவேரொடிய செஞ்சோலை
மண்ணிடை யோர்மணி என்றொளி வீசிடும்
மாசற்ற வாசத்தின் செஞ்சோலை

வாழ்க! வாழ்க! வாழ்க!
வாழிய, வாழிய, வாழியவே

தாயினை நிகர்த்திடும் தாயகம் எங்களின்
தாகமென் றோதிடும் செஞ்சோலை
காவிய நாயகன் காட்டிடும் பாதையில்
கால்நடக் கின்றநம் செஞ்சோலை.

## எங்கள் தாயவள் கொடி

ஏறுது பார் கொடி ஏறுது பார்
ஏறுது பார் கொடி ஏறுது பார் – இங்கே
ஏறுது பார் கொடி ஏறுது பார் – தமிழ்
ஈழத்தின் வேதனை தீர்த்த கொடி – எட்டுத்
திக்கிலும் மானத்தைச் சேர்த்த கொடி
காலத்தை வென்றுமே நின்ற கொடி – புலி
காட்டிய பாதையில் சென்ற கொடி

செக்கர் நிறத்திலே...... வேங்கை நடுவிலே
சீறிடும் கொடியிது – தமிழ்
மக்களைக் காத்தநம் மானமாவீரரை
வாழ்த்திடும் கொடி இது – புலி
வீரத்தின் கொடியிது – மா
வீரரின் கொடியிது.

எத்தனை எத்தனை வேங்கைகள் ரத்தத்தில்
ஏறிய கொடியிது – பெரும்
சத்திய வேள்வியில் செத்தவர் மீதினில்
சாத்திய கொடியிது – தமிழ்
ஈழத்தின் கொடியிது – புலி
ஏந்திய கொடியிது.

சாதிகள் சண்டைகள் சாய்த்து விழுத்திய
சாதனைக் கொடியிது – சங்கு
ஊதி முழங்கிட ஊர்மனையாவிலும்

உலவிய கொடியிது – சம
தர்மத்தின் கொடியிது – எங்கள்
தாயவள் கொடியிது.

ஆயிரம் ஆயிரம் பேரென வேங்கைகள்
ஆக்கிய கொடியிது – பிர
பாகரன் என்றிடும் காவிய நாயகன்
போற்றிடும் கொடியிது – தமிழ்
தேசத்தின் கொடியிது – எங்கள்
தேசியக் கொடியிது!

# விழிமூடித் தூங்கும் வேங்கைகள்

**உறுதிமொழி**

மொழியாகி, எங்கள் மூச்சாகி, நாளை
மடிசூடும் தமிழ் மீது உறுதி
வழிகாட்டி, எம்மை உருவாக்கும் தலைவன்
வரலாறு மீதிலும் உறுதி
விழிமூடி இங்கே துயில்கின்ற வேங்கை
வீரர்கள் மீதிலும் உறுதி
இழிவாக வாழோம், தமிழீழப் போரில்
இனிமேலும் ஓயோம் உறுதி.

**பாடல்**

தாயகக் கனவுடன் சாவினைத் தழுவிய
சந்தனப் பேழைகளே! – இங்கு
கூவிடும் எங்களின் குரல்மொழி கேட்குதா
குழியினுள் வாழ்பவரே!
உங்களைப் பெற்றவர் உங்களின் தோழிகள்
உறவினர் வந்துள்ளோம் – அன்று
செங்களம் மீதிலே உங்களோடாடிய
தோழர்கள் வந்துள்ளோம்.

எங்கே! எங்கே! ஒருதரம் விழிகளை
இங்கே திறவுங்கள்
ஒருதரம் உங்களின் திருமுகம் காட்டியே
மறுபடி உறங்குங்கள்

நள்ளிரா வேளையில் நெய்விளக்கேற்றியே
நாமுமை வணங்குகின்றோம் – உங்கள்
கல்லறை மீதிலெம் கைகளை வைத்தொரு
சத்தியம் செய்கின்றோம்.
சாவரும் போதிலும் தணலிடை வேகிலும்
சந்ததி தூங்காது – எங்கள்
தாயகம் வரும் வரை தாவிடும் புலிகளின்
தாகங்கள் தீராது.

எங்கே! எங்கே! ஒருதரம் விழிகளை
இங்கே திறவுங்கள்
ஒருதரம் உங்களின் திருமுகம் காட்டியே
மறுபடி உறங்குங்கள்!

உயிர் விடும் வேளையில் உங்களின் வாயது
உரைத்தது 'தமிழீழம்' – அதை
நிரை நிரையாகவே நின்றினி விரைவினில்
நிச்சயம் எடுத்தாள்வோம்.
தலைவனின் பாதையில் தமிழினம் உயிர் பெறும்
தனியர(சு) என்றிடுவோம் – எந்த
நிலைவரும் போதிலும் நிமிருவோம், உங்களின்
நினைவுடன் வென்றிடுவோம்.

எங்கே! எங்கே! ஒருதரம் விழிகளை
இங்கே திறவுங்கள்
ஒருதரம் உங்களின் திருமுகம் காட்டியே
மறுபடி உறங்குங்கள்.

வெளிச்சம்
கார்த்திகை 1992

# போராடு! மீண்டும் போவோமென்று உறுதிஎடு!

ஒதுங்கிக் கொள்ளாதே!
ஒவ்வொன்றாக இழந்து இழந்து, ஒதுங்கிக்கொள்ளாதே
போராடு.
மீண்டும் போவோமென்று
உறுதி எடு;
ஒதுங்கிக் கொள்ளாதே!

வற்றாப்பளை அம்மன் கோவில்
வைகாசிப் பொங்கல் முடிந்த கையோடு
கரை வழியாகக் கதிர்காமப் பயணம்
'அரோகரா'க் கோஷம் வானைப் பிளக்க
மாணிக்க கங்கையில் தீர்த்தமாடும்
கனவில் மிதந்து
நடந்த கால்கள் எங்கே? எங்கே?

போராடு.
மீண்டும் போவோமென்று
உறுதி எடு;
ஒதுங்கிக்கொள்ளாதே!

'குரைகடலோதம் நித்திலம் கொழிக்கும்
கோணமலை'
போகமுடியுமா?

இராவணன் வெட்டை ரசிக்கமுடியுமா?
அந்திவான மஞ்சள் வெயிலில்
அந்த நகரம் குளிக்கும் அழகினை
முந்திப் பார்த்து மெய்சிலிர்த்திட்டாய்
இன்று போக எப்படி முடியும்?

போராடு.
மீண்டும் போவோமென்று
உறுதி எடு ;
ஒதுங்கிக் கொள்ளாதே!

பாண்டிருப்பு பத்தினி அம்மன்
பங்குனி மாதப் பொங்கலென்றாலே
எங்கிருந்தெல்லாம் வந்து சேர்வார்கள்!
இன்றேன் அந்த வீதி வெறிச்சது
தீமிதிக்கின்ற நேர்த்தி என்னாச்சு?

போராடு
மீண்டும் போவோமென்று
உறுதி எடு ;
ஒதுங்கிக் கொள்ளாதே!

மன்னார் மடுப்பதி மாதா முன்னால்
கண்கள் மூடிக் கண்ணீர் சொரிந்து
சுருவம் சுற்றும் அழகில் உருகி
உன்னை இழந்த உணர்வு வடிந்ததா?
இன்றும் போக இயலும்

ஆனால்,
இன்னல் எத்தனை ஏற்றுப்போகிறாய்!
நேர்வழியிருக்க நீந்திப் போகிறாய்
படகிலேறி உயிரை இழக்கின்றாய்.

போராடு.
மீண்டும் போவோமென்று
உறுதி எடு ;
ஒதுங்கிக் கொள்ளாதே!

'பாலைதீவு
அந்தோனியார் அழைக்கிறார் ;
படகிற் போகிறோம்
நீயும் வாறியா? நீயும் வாறியா?'
இப்படிப் பேசி மகிழ்ந்த வாய்கள்
எப்படி இன்று ஊமைகளாயின?

போராடு.
மீண்டும் போவோமென்று
உறுதி எடு ;
ஒதுங்கிக் கொள்ளாதே!

கீரிமலைக் கேணியை இன்று
யாரிடம் கொடுத்து ஒதுங்கிக் கொண்டாய்?
ஆடிஅமாவாசை அன்றுதானே
கீரிமலைக் கடலில் குளித்து
அப்பனுக்குத் 'தர்ப்பணம்' செய்வாய்?

இன்று,
'பிதுர்க்கடன்' செய்யவும் போக்கிடமில்லையா?
எப்படி உன்னால் பொறுத்திட முடியும்?

ஒதுங்கிக் கொள்ளாதே!
ஒவ்வொன்றாக இழந்து இழந்து
ஒதுங்கிக் கொள்ளாதே.
போராடு
மீண்டும் போவோமென்று
உறுதி எடு ;
ஒதுங்கிக் கொள்ளாதே!

*வெளிச்சம்*
*புரட்டாதி ஐப்பசி 1992*

## நலம்; நலமறியா ஆவல்!

என்னினிய நண்பனே!
அகதியாகித் திசைகள் எங்கும்
அலையும் தமிழனே!
இங்கிருந்த உன் வேர்களை வெட்டி,
அந்நிய மண்ணில்
'இருப்பிழந்து' இருப்பவனே!
உன்கடிதம் கிடைத்தது.
வாசித்தபோது,
வரிகளுக்குள்ளே
உன் முகத்தைத் தேடினேன்.
எல்லாமே முகமிழந்திருந்தன.
சில முகமூடி போட்டிருந்தன;
அதனால்
பழைய நண்பனைப் பார்க்க முடியவில்லை.
நண்பனே!
நீயும் நானும் பேசிக்களித்த
பூமிக்குக் குடைபிடிக்கும் 'பூவரசமரம்'
சைக்கிள் பழகிய 'கிழுவரை வயல்'
பன்றித்தலைச்சி அம்மன் கோவிலுக்கு
பங்குனி மாதப் பொங்கலுக்காக......
நாங்கள் நடந்த "அந்தத்தெரு"
மனோன்மணி அக்கா மாடுகள் மேய்த்த
"அந்திரானைத் தரவைப் பெருவெளி"
எல்லாமே இங்கே இருக்கின்றன.
நண்பனே!
போருக்கு அஞ்சி இவையொன்றும் புலம்பெயரவில்லை!
குண்டுக்குப் பயந்து இவைகள் குடிபெயரவில்லை!

ஆனால்.... நீ......
எனக்குச் சிரிப்பாக இருக்கிறது
பனைமரத்துக்கு நிழலில்லை என்றுதானே
பறந்தாய்?
வேறு நாட்டுப் பன்னீர் மரநிழல்,
எத்தனை காலத்துக்கு இதமளிக்கும்?
கால்களைத் தழுவும் நீரோடை,
பஞ்சு முகில் முகம் துடைக்கும் பனிமலை,
'ஸ்நோ' பூ தூவும் புழுதியற்ற தெருக்கள்
பதனப் பெட்டியை மெல்லத் திறந்தால்....
முகம் காட்டும் 'கூல்பியர்'
இங்கு இல்லைத்தான்;
என்றாலும் மகிழ்ச்சியாக இருக்கின்றோம்
'ஏதோ ஒருமாதிரி வாழ்கின்றோம்'
என்பது போல் அல்ல...
குளியல் அறையில் ஆடைகள் அற்று
குளிக்கும் சுகமிருக்கிறதே,
அது போன்ற 'ஆனந்தவாழ்வு'
குண்டு வீச்சு விமானங்கள்
அடிக்கடி வரும்;
காலையில் 'அடிவளவு அலுவல்' போல
அதுவரும் நாளாந்தக் கடமையாகி விட்டது.
என்றாலும் நீ எழுதியது போல,
'பதுங்கு குழியல்ல எங்கள் படுக்கையறை'
இங்கே,
நிலவுகேட்டுப் பிள்ளைகள் அழுவதில்லை ;
இப்போது 'புக்காரா'வைப் பிடித்துத் தரட்டாம்!
'உலங்குவானூர்தி' யின் விசிறிக்காற்றில்தான்,
நாங்கள்,

முழுகியதலையை உலர்த்திக் கொள்ளுகின்றோம்.
உனக்கு ஆச்சரியமாக இருக்கலாம்;
ஆனால் உண்மை.
இங்கே இந்த வீரம் விளையுமென்று,
எவர்தான் எதிர்பார்த்தார்கள்?
உன் மகளின் புகைப்படம் அனுப்பியிருந்தாய்
பொலிவாக இருக்கிறாள்
'எஞ்சினியர்' மாப்பிள்ளை பேசுவதாக எழுதியிருந்தாய்
எல்லாம் ஒப்பேறி விட்டதா?
அவளின் வசந்தத்துக்கு எனது வாழ்த்தைக் கூறு.
என் மகளுக்கும் சுகம் கூறச் சொன்னாய்
சொல்லலாம் –
அவள்தான் என்பக்கத்தில் இல்லையே!
காலமிட்ட கட்டளையை ஏற்று
களத்துக்குப் போய்விட்டாள்.
பயிற்சி முடிய மாதங்கள் ஆகலாம்
விடுமுறையில் வீடு வரும் போது
உன் விருப்பத்தைக் கூறுகின்றேன்.
வேறு என்ன?
நலம்; நலமறிய ஆவல்!

*வெளிச்சம்*
*வைகாசி 1993*

# தாயகத்தைக் காதல் செய்

'தம்பி டேய்'!
நீ கோப்பாய்த் தவராசா வாத்தியின்ரை
தம்பியல்லே.....
எங்கை பயணம்... கனடாவோ
அடிசக்கை...
போங்கோ.... போய்த்திரும்பி
பிறகெல்லாம் முடிஞ்ச பின்னர்
வாங்கோ, கிழடுகள்
வரவேற்கக் காத்திருப்போம்.'

நெருப்புக்குள் நின்றும் நிமிர்ந்தோம்;
சிரிக்கின்றோம்
இருப்பிழந்து போகாமல் இன்னும் இருக்கின்றோம்
பெருமைப்படு.
தேகம் புல்லரிக்க நின்றாடு
தொழுதெம் மண்மீது தொடு
கண்ணில் வை.
புழுதிமண்ணானாலும் புரண்டு விழுந்தெழும்பு
தாயை நிகரெங்கள் தாயகத்தைக் காதல் செய்
வாயால் புகழ்ந்தேற்றி வாழ்த்து
இம்மண்ணில்
வீரம் விளைக்கின்ற வீரர்களை மனத்தெண்ணு.
பாரம் சுமக்கின்ற பாலகரைக் கட்டியணை.
நேற்றுவரை தூங்கி நினைவிழந்து
எதிரியெனும்

கூற்றுவனுக் கிலக்காகி
குலைந்தழிந்த தமிழினத்தை
ஆற்றுப்படுத்த வந்த அத்தலைவன் பெயரைச்சொல்.
மாரியெனக் குண்டு மழைபொழியும்;
எறிகணைகள்
கூவிவரும்;
வீதிகுழியாகும்....
நாங்களிங்கு
நாறிப்போய் விட்டோமா?
நடைப்பிணங்க ளானோமா?
இல்லை....!
இதற்குள்ளே இருக்கப் பழகிவிட்டோம்.
புல்லும் நிமிர்ந்து போர்க்கோலம் பூண்டதுபோல்,
வெல்வோம் எனும் உறுதி
வீச்சோடு வாழ்கின்றோம்!
ஆனைவந்தெங்கள் அழகான வயலுக்குள்
சேனை புலவுக்குள்
தின்கிறது.
வழியாலே.......
போய்வாற பேரைப் பிடித்து மிதிக்கிறது,
காய்கூய் என்றாரும்
கத்தித் தொலைத்தாலும்
வாய்நோகுதன்றி 'வாரணங்கள்' போகுதில்லை,
வெடிகொளுத்திப் போட்டால் வெருண்டோடும்
அதற்கிங்கே
பொடியள் சிலபேர்கள் போதுமா?
கனபேர்கள்

வேண்டும் என்செய்வோம்
விருத்தெரிந்த இளசெல்லாம்
கூண்டுதிறந்து.... குருவிகள் போல்...
கடற்பரப்பைத் தாண்டி
தங்களது
தனிச்சுகமே சுகமென்று,
திக்கொன்றாய்ப் பறந்து திசைமாறிப் போயினவே!
தக்க தருணத்தில் தாய்மண் துணையின்றி
துக்கித்திருக்கிறது.
தொப்புள் கொடியுறவு
எல்லாம் பொய்யாகி இல்லாததொன்றாகி
பல்தேச மெங்கும் பறந்து சிதறினவா?
என்றாலும் நாங்கள் 'இருப்பை' இழக்கவில்லை!
தென்னை இளநீரும்
செவ்வலரி சிறுபூவும்
கண்மலர்த்தி, வேம்பு காய்பழமும் தருகிறது.
கத்தரியும்
வெண்டிக்கன்றும்
பூக்கிறது.
சட்டிக்கரணை தழைக்கிறது.
இந்த மண் அழகோடு இன்றும் தான் இருக்கிறது ;
எந்தத்துயர் வரினும் இனிக்கலக்கம் கொள்ளாது!
ஆழக்கிணறு,
ஆடுகால் பூவரசு,
நீளக்கிடக்கின்ற நெல்வயல்கள்
உள்ளமட்டும்
காலில் விழுந்து எவர்க்கும் கைகட்டி நிற்காது!

நேற்றென் பேரன் நேர் வந்தான்;
எனைக்கட்டிக்
காற்றில் மிதந்தான், களித்தான்,
முத்தமிட்டான்
வரம்பில் இருந்தான், வாய்க்காலின் தண்ணீரை
விரும்பிக் குடித்தான், வெளிக்கிட்டான்.
'எங்கையடா போகின்றாய்'
என்றேன்.
அவன் நின்றான் ;
'சண்டைக்கு' என்று சத்தமிட்டுச் சொல்லி விட்டு
சென்றான்!
இனியெங்கள் தேசம் பணியாது.
தாய் மண்ணைக் காதலிக்கும் தளிர்கள் இருக்குமட்டும்
பாய்விரித்தெம் தேசம் படுக்காது ;
போர் செய்யும்!

*முத்தமிழ் விழா மலர்*
*1992*

# இருளிலிருந்து எழுக!

எழுக என்தங்காய்! எழுக என்தங்காய்!
இருளினுள் ளிருந்து எழுக என்தங்காய்
மலையென நிமிர்க! மலையென நிமிர்க!
மாதவப் பேறே! மலையென நிமிர்க.

காலப் பெருவெளியில் கரிபடர்ந்த ஓவியமாய்
நீளும் திசையெங்கும் நீ கிடந்தாய்.
வரிசங்கம்;
ஊதி, உனையெழுப்ப ஒருவரின்றி,
நீள் துயிலில்;
பாதிவிழிதிறந்தும் பார்க்காமல் கிடக்கின்றாய்.
வெயிலில் உலர்ந்த விறகாகி,
அடுப்பெரிப்போர்;
கையில் அகப்பட்டுக் கரியாகிப் போகின்றாய்.
கண்ணிருந்தும் குருடானாய்
காலிருந்தும் முடமானாய்
வண்ண மொழியுதிரும் வாயிருந்தும்,
ஊமையெனப்;
பேச்சிழந்து நிற்கின்றாய்.
பெண்ணே! என்தங்காய்!
மூச்செழுந்தே வையமுகடை உடைக்க வல்ல;
வீரியத்தைக் கொண்ட வீசுபுயலே!
உனது
பேரியக்கம் புரியாமல்.
போட்டபடி கிடக்கின்றாய்.
எழுக என் தங்காய்! எழுக என் தங்காய்!
இருளினுள் ளிருந்து எழுக என்தங்காய்.

மலையென நிமிர்க! மலையென நிமிர்க!
மாதவப் பேறே! மலையென நிமிர்க!

கத்தரிக்காய் பொரிப்பதற்கா கையுனக்கு?
பிள்ளையது,
தொத்திக் கிடப்பதற்கா தோளுனக்கு?
நீர்க்குடங்கள்,
இட்டுச் சுமப்பதற்கா இடையுனக்கு?
இல்லையடி,
தூளிடித்து;
மாவிடித்து;
சூடைமீன் குழம்புவைத்து;
பாழிருட்டில் தூங்கும் பழக்கமதை விட்டுவிட்டு,
சிங்கவேட்டைக்கு சிலிர்த்தெழும்பி வந்துவிடு,
தும்பி பிடிப்பதற்கே;
துணிவிலாப் பெண்களென;
எள்ளி நகைப்பவரை ஏளனங்கள் செய்துவிட்டு,
புள்ளியெனச் சுற்றும்;
பூமியினை வெற்றிகொள்ளு.

எழுக என் தங்காய்! எழுக என் தங்காய்!
இருளினுள் ளிருந்து எழுக என் தங்காய்!
மலையென நிமிர்க! மலையென நிமிர்க!
மாதவப் பேறே! மலையென நிமிர்க!
பார்; இந்த வையப் பரப்பெல்லாம்,
எம் மண்ணின்;
கூர்மழுங்கா வீரக் குரல் கேட்கும் நேரமிது.
தடுமாறாச்,
'சூரியத் தலைவன்' வழிகாட்ட,

விடுதலைப்பண்பாடி,
விரித்த சிறகொடுகால்;
எட்டிமிதித்து, எதிரிமுகாம் மீதெழுந்து,
தொட்டசைத்து,
அங்கே தீமூட்டும் கைகளெவை?
உன் தங்கை கைகள் உலகத்தை அசைக்கிறது.
கண்திறவாய்;
நீயும்;
காலெடுத்து வெளிவருவாய்.

எழுக என் தங்காய்! எழுக என் தங்காய்!
இருளினுள் ளிருந்து எழுக என் தங்காய்!
மலையென நிமிர்க! மலையென நிமிர்க!
மாதவப் பேறே! மலையென நிமிர்க!

*வெளிச்சம்*
*பங்குனி 1993*

# இன்று இருட்டுத்தான் நாளை சூரியன் தலைக்கு மேலே வரும்

வீதிவிளக்குகளுக்கும்
விடியாமல் போன
மூன்று வருடங்களுக்குப் பின்னர்.
இன்று,
நட்சத்திரங்களையும் மேகம் மறைத்துவிட
இருளே தடுமாறும் இருட்டு.
அடிமைச் சுகமே அற்புதமென்று
அடங்கிக் கிடக்கும் தமிழனைப் போல
வெளிச்சம் அற்றுப் போனதை மறந்து
இருட்டில் வாழப் பழகிய முகங்கள்
நாளைப் பொழுது எப்படிக் கழியும்?
என்றே எண்ணி
ஏங்கிய படியே,
இருட்டில் இருந்து இருமும் கணவன்
பஞ்சுவிளக்கில் படிக்கும் பிள்ளைகள்.
பழைய கறியை கொதிக்க வைக்க
மூட்டிய அடுப்பு வெளிச்சம் தன்னில்
முட்டை விற்று
முருங்கைக்காய் வாங்கிய
வரவுசெலவைப் பார்க்கும் மனைவி.
மாசி மாதப் பனிக்கு
வாயில்
பொருக்கு வெடித்த மாதிரியாக ஷை

வெடித்துப் பிளந்த எங்கள் வீதியில்
மனிதச் சுமைகளைச் சுமந்து சென்று
கிளாலிக் கரையில்
கொட்டிய பின்னர்,
ஊரின் அயர்ந்த உறக்கம் கலைத்து
'மண்ணெண்ணை' குடித்த
மோட்டார் சைக்கிள்
உறுமிக் கொண்டு ஓடிச் செல்லும்.
யப்பான்காரன் பார்த்தால்
விரலை
வாயில் வைத்து அதிசயப்படுவான்.
பெற்றோல் விற்கும் அரபுக்காரன்
வயிற்றில் அடித்து
மயக்கம் அடைவான்.
பட்டணம் சென்று படிக்கும் பொடியள்
படிப்பு முடிந்து திரும்பும் போது
இருண்டு கிடக்கும் வீதியில்.....
அவர்கள்,
'போரம்மா' என்று பாடிக்கொண்டு
போவதைப் பார்க்க மனசு நிறையும்.
தூரத்தில்
துப்பாக்கி வெடிக்கும் சத்தம் ;
எறிகணை விழுந்து வெடிக்கும் அதிர்வு.
பண்டத்தரிப்புப் பக்கம்
இராணுவம்
நகருவதாக 'வோக்கி' கதைக்கும்.
ஆங்காங்குள்ள முகாம்களிலிருந்து
'பிள்ளைகள்' ஏறிப் போகும் வாகனம்
வீதியில் இரைந்து மெல்ல மறையும்.

ஆயினும் எந்த அச்சமுமின்றி
இருட்டில் மக்கள் இருப்பர்;
சிரிப்பர்.
'பொடியள்' உண்டு என்ற நினைப்பில்
நம்பிக்கையோடு ஊர்கள் உறங்கும்.
'தம்பியின் காலத்தில் தமிழீழ மென்று'
பாடிக் கொண்டு போன கிழவனில்
எத்தனை உறுதி முகத்தில் இருந்தது.
இருட்டில் இருந்தும் எங்கள் தாயகம்
இருப்பை இழந்து போய் விடவில்லை,
எந்த நெருப்பும் எம்மைச் சுட்டு
எரித்திட முடியாதென்பதை அறிவோம்.
இருட்டில் இருப்பது விடியலுக்காவே
விடிவே விடுதலை என்பது சத்தியம்.
இருட்டில் இருந்தும்
இருட்டைத் துடைப்போம்
இருகை விலங்கை இன்றே உடைப்போம்.
சூரிய வெளிச்சம் சுதந்திர மானால்
நாளை எங்கள் மண்ணின் மேலே
சூரியன் வருவது நிச்சயம்,
நிச்சயம்.

*வெளிச்சம்*
*ஆடி 1993*

# கைகளால் அணைக்கும் காவியம்

கரும்புலியிருவரைக் கைகளால் அணைத்துக்
'காவியம்' நிற்கிறது – வளையா
இரும்பினுக்குள்ளும் இளகிய நெஞ்சம்
இருப்பது தெரிகிறது!
'காவியநாயகன்' கண்களிற் கசியும்
கருணைக்கு ஈடுண்டோ? – அவர்
தூவிய விடுதலைச் சுடர் ஏந்திய
வீரருக்கிணை யுண்டோ?
வல்வைக் கடலினில் வரிப்புலி வீரர்கள்
வரும்பகை முடித்தார்கள் – எங்கள்
எல்லையை மீறிய.... எதிரியின் படகினை
எரித்தபின் வெடித்தார்கள்!
கரும்புலியாகிய கடற்புலி வீரர்கள்
காவியமானார்கள் – எதிரியின்
பெரும்பலமாகிய பீரங்கிப் படகினைப்
பிளந்துடல் சாய்ந்தார்கள்.

*ஈழநாதம்*
*10.05.1991*

# தாயகம் காணுவோம்

குண்டுபட்டுப் போனவர் எத்தனை
குடல்சரிந்து போனவர் எத்தனை
வண்டியில் வரும்போதிலே கடலிலே
வாழ்விழந்து போனவர் எத்தனை
கொண்டலட்சியம் குன்றிடா தெங்களின்
கொள்கைவீரரின் காலடி மண்ணிலே
நின்றுகொண்டொரு போர்க்கொடி தூக்குவோம்
நிச்சயம் ஒரு தாயகம் காணுவோம்.

*களத்தில் மலர்ந்தவை*
*1988*

# தென்தமிழீழம்

வீதியில் சாவு வரும்
வீட்டினில்சாவு வரும் – எங்கள்
செந்தமி ழீழத்தில் சிந்திடும் ரத்தங்கள்
எத்தனை காலத்துக்கோ?

சிங்களன் கொல்லுகிறான்
சோனகன் வெட்டுகிறான் – எங்கள்
சொந்தங்கள் ஒன்றெனச் சேருவதையகோ
எந்தெந்தக் காலத்திலோ?

வாவியில் மீனிருக்கு
பூமியில் நெல்லிருக்கு – அந்த
ஆமிகள் வந்தெமை ஆக்கினை தந்திடில்
ஆரதைத் தின்னுவதோ?

பாலைப்பொழி நிலவில்
பாட்டுப் பிறந்த நிலம் – இன்று
சிங்களவர் வந்தெங்கள் செந்தமிழீழத்தில்
செய்வதோ அக்கிரமம்

பள்ளியும் இல்லையய்யா
கல்வியும் இல்லையய்யா – எங்கள்
பிள்ளைகள் சாவினைப் பார்த்தவராதலால்
பொங்கும் புலிகளய்யா.

# பாடவேண்டிய பரணிக்கு எடுத்துக் கொடுத்த முதலடி

ஆயிரத்து தொளாயிரத்து எண்பத்து ஏழு
அக்டோபர் பத்தாம் நாள்
அதிகாலை ஐந்து மணி.
திருவிலில் மூண்ட தீயாறி முடிய முன்னர்
ஊரழுத கண்ணீரில் ஒரு துளியும் காயமுன்னர்
நேருமகள் பெற்ற நெடுமகன்
எம் தாய் நாட்டின்
மீது படையெடுத்தான்,
மோதிலால் நேருவழிப் பேரன்
படை யெடுத்தான்
புலிகளை ஓர் நாளினுக்குள்
காட்டுக்கனுப்பிக் கதைமுடிப்பேன்
என்றுரைத்து
அக்கோடபர் ஒரு காலை அழிக்கத் தொடங்கி விட்டார்
'முரசொலியை'
'ஈழமுரசை'
'நிதர்சன'த்தை
இரவோடிரவாக இரைகொள்ளத் தொடங்கிவிட்டார்
காக்கவந்த வீரரெனக் கதையளந்த படையினர்கள்
தாக்கத் தொடங்கியதால்
தமிழீழம் போர்க்களமாய்
மாறியது.
மீண்டும் மரணப்பேய் ஆடியது.
ஆறிவந்த புண்மீது 'அமைதிப்படை' அம்பெறிந்து
கீறியது,

வேங்கை
கீழ்வைத்த ஆயுதத்தோடு
ஏறியது,
தமிழீழம் ரணகளமாய் மாறியது
ஆதிக்க வாய்க்கு அவலாக எமைநினைத்து
நீதிக்குப் பக்கத்தில் நிற்கும்
புலிகளுடன்
மோதத் தொடங்கியதால் மூக்குடைந்து போனதுகாண்
நாளுக்குள்
இருபத்து நான்கு மணியதின்மேல்
நீளாமல்
புலிகளெல்லாம் நிர்மூலம் என்றாயே.
நொடியில் பிடித்துனது
நுனிவிரலால் இழுத்து வந்து
விடியும் பொழுதினுக்குள்
விலாசமின்றிச் செய்வதற்கு
புலிவீரரென்ன புறம்போக்கு நிலத்தினிலே
விளையும் சிறுகீரை வித்தென்றா
எண்ணி வந்தாய்?
வானத்தில் வந்து வட்டமிட்டால்
புலிவீரர்
கானகத்துக்கோடி கண்மறைந்து போய்விடுவார்
என்றா நினைத்தாய்?
எங்கள் புலிக் குட்டிகளை
கன்றென்று எண்ணித்தான்
கால் பதிக்க வந்தாயோ?
சுற்றிவர நின்று சுட்டால்
பயந்தொழிக்கும்
கட்டைகளா எங்கள் கரும்புலிகள்?

இல்லையடா!
பற்றும் நெருப்புள்ளும்
படுத்துறங்கும் வீரரடா.
வானூர்தி
கவசவாகனங்கள்
வான்பரப்பில்
தானூர்ந்து சென்று தாக்கும் விசைகருவி
அத்தனையும் கொண்டுவந்து
அடுக்கி விட்டால்....
புலிவீரர் செத்துப் பயந்தொழித்து
திசைக்கொன்றாய் போய்விடுவார்
என்றா நினைத்தீர்?
ஏமாந்து போனீரே!
அன்று இதை நினைத்தா அலைகடலில் ஏறிவந்தீர்?
வந்தவுடன் உம்மை வரவேற்று
தாள் பணிந்து
சந்தனங்கள் இட்டு
தலைப்பாகை தான்சூட்டி
தண்டமிட்டு உங்கள் தாள்பணிய
நாங்களென்ன
தொண்டர்களா? அன்றிச் சேவகரா?
தொழும்பு செய்து
அண்டிப் பிழைக்கும் அரைகுறையா?
இல்லையடா!
வேங்கைகளை
நாளை விடிய முன்னர் அழிப்பதெனில்
வேங்கைகளும்
தமிழீழ வீரமண் என்பதுவும்
பஞ்சாப்பா?

அன்றிப் பாகிஸ்தான் பனிநிலமா?
அஞ்சிப் பயந்தொடுங்க அசாமின் சிறுகுழுவா?
இல்லையடா
தமிழீழம் எரிமலையின் வாசலடா!
பல்முளைக்கா எங்கள் பாலகர்கள்கூட
ஒரு கல்லெறிந்து
உன்னைக் கலைக்கின்ற வீரரடா
எதிரிகளின் பாசறைகள் எங்கே
எனத்தேடி
அதிரடிகள் செய்து அழிக்கும் புலிகளுடன்
மோதவந்த உங்கள் மூளைக்கு சலவையிடு
சேதனைகள் தாண்டிச் சென்றிடுங்கள்
இல்லையெனில்
காதணிகள் கூடக் கைக்குண்டாய் மாறிவிடும்
பெண்ணென்று எங்கள்
பூமியிலே பிறந்து விட்டால்
பெண்ணல்ல...
அவர்கள் புலிகளென்று நீயறிவாய்.
மானத்தைப் பெரிதாய் மதிப்பார்கள்
மயிர் நீப்பின்
மானினத்தைப் போல மரிக்கார்கள்
எதிரிகளை
சூளுரைத்துச் சென்று
சுடுகாட்டுக் கனுப்பிவிட்டே
வாழ்விழந்து போகும் வரலாறு எங்களது.
பத்துநாள் யுத்தத்தைப் பாடவொரு பரணிஎழும்
வித்தோடு போர்செய்து
விருட்சம் விழுந்தகதை
எங்கேனும் உண்டா?

இல்லை
எம்நாட்டில்
இங்கே நடந்ததுண்டு
எரிமலையைத் தொட்டுவிட்டு
காட்டாறு தோற்றுக் கலங்கியது இங்கே தான்
நாட்டாண்மை காட்டி நடந்தவர்கள்
விடுதலைக்காய்
கூட்டைத் துறந்த குருவியிடம் தோற்றார்கள்
வானத்தில் தும்பி வட்டமிட
ஏவிவிடும்
தூணளவு பெரிய சுடுகுண்டால்
நிலமதிர
வெள்ளம்போல் பாய்ந்து வெறியர் படைவந்து
கொள்ளியினை வைத்துக் கொளுத்தியது
வேங்கைகளை
அள்ளிக்குடித்து அழிப்போம்
எனச் சொல்லித்
துள்ளியது,
வேங்கைகளைத் தொடவும் முடியவில்லை
மக்களையே கொன்று மலைபோல் குவித்தார்கள்
திக்கெட்டும் பொய்ச்செய்தி திரித்தார்கள்
வலுவிழந்து
புலிகளெல்லாம் காட்டுக்குள்
புகுந்து விட்டார் என்றார்கள்
பலிகொள்ள மக்களின் மேல் பாய்ந்து உதைத்தார்கள்
உண்டி கொடுத்தீரோ?
ஊர்வலத்தில் போனீரோ?
நண்டுக்கு வளைபோல நடந்தீரோ?
என்றெல்லாம்

கேட்டுக் கேட்டடித்து மகிழ்ந்தார்கள்
நாட்டுக்குள் நின்ற நல்லவரைக் கொன்றார்கள்
அரிசியுடன் வந்த அந்நியரே!
உங்களுக்குப் பரிசெதற்கு?
வீரப் பதக்கங்கள் ஏனெதற்கு?
முற்றிப் பழுப்பதற்கு மூன்று நாளிருக்கையிலே
வெட்டிச் சரிப்பதற்கா
வெளிக்கிட்டு வந்தீர்கள்?
இந்து சமுத்திரத்தில் இருக்கின்ற நிலமெல்லாம்
உங்களது சீதனமா?
ஊருலகில் நீ பெரிய சண்டியனா?
இங்குனக்குத் தளமமைக்க நோக்குண்டா?
அண்டையிலே உள்ள அரசுமக்கு
சிற்றரசா?
ஏன்வந்தாய்
வேங்கை எழுந்துள்ள வீர மண்ணின்
வான்பரப்பில் வந்து வாலாட்டும்
துணிவுனக்கு தந்தது யார்?
இங்கே
தானாள வேண்டு மென்று
நின்ற 'பெருமாளை' நீ பிடித்த காரணம் சொல்
நீ பிடித்த துரோகிகளின்
நிறகுணங்கள் என்ன வென்று
வா,
எங்கள் மக்களது வாய்சொல்லும் கேட்டுக்கொள்.
தத்துவங்கள் பேசி
தனிஈழம் என்றுரைத்து
எத்தனையோ வீட்டில் இரவில் களவெடுத்தார்
சத்திரங்கள் போலிருந்து சாப்பிட்டு

வாகனத்தில்
ஏறிப் பறந்ததன்றி
எதிரிமுகாம் பார்த்தறியார்
நீரில் இறங்காமல் நீந்தும்
இவர்களெல்லாம்
காரைநகரடித்த கதையெமக்குத் தெரியாதா?
குச்சவெளியடிக்கக்
குரல்வைத்துச் சென்றவர்கள்
பிச்சை வேண்டாம் நாயைப்பிடி
என்று வந்த கதை
எங்களுக்குத் தெரியாதா?
எழுத்தினிலும் பேச்சினிலும்
செங்கொடிகள் என்று
சொல்லித் திரிந்தவர்கள்
எப்படித்தான் அந்நியர்க்கு ஏவல் புரிந்தனரோ?
துப்பாக்கி தூக்கத் துணிவின்றி
அந்நியரின்
முந்தானைக்குள்ளே முகம்பதித்த துரோகிகளே!
அந்நியனுக் கெங்கள் அழகான தாய்நாட்டை
விண்ணளவு வளர்ந்து விளங்கும்
தமிழீழ மண்ணை
எம்மக்கள், மனைகள், வயல் வெளியை
பொன்னைப் போல் காத்துப் பூசித்த
குலமரபை
எங்களுடன் நின்று எரிந்த விளக்குகளை
வந்தவருக்காக வறுத்தெடுத்து விட்டீரே
நாங்கள் சிரித்தபடி நடந்து திரிவதற்கும்
தூங்கி மகிழ்வதற்கும்
சுதந்திரங்கள் வேண்டும் காண்

எங்கள் சிறுமழலை எழுந்து நடப்பதற்கு
இங்கெதுவும் தடைகள் இருப்பதையே
வெறுக்கின்றோம்.
நடந்த சிறுகுழந்தை
நாளையிந்த நாட்டினிலே
அடங்கிக் கிடப்பதெனில்
அதைப்பொறுக்க மாட்டோம் காண்
இந்நாட்டில் எங்களுக்கு இடம் வேண்டும்.
சுதந்திரமாய்
தும்ம, இரும ஒருதடையும் கூடாது
எங்களது நெஞ்சில்
அந்நியனின் கால் பதிய
சம்மதிக்க மாட்டோம்
சாவுக்கு நாம் பயந்து
எங்களது வானத்தில் இரவல் கழுகுகளின்
தகரச் சிறகுகளின் தலையசைப்பை
பார்த்திருக்கோம்.
எங்களுக்கு வேண்டும் சுதந்திரங்கள்
யாருக்கும்
தொங்கல் பிடித்துத் தொழும்புகளைச் செய்யாத
கட்டற்ற வாழ்வதையே
காணத் துடிக்கின்றோம்!

*களத்தில் மலர்ந்தவை*
*1988*

# விடியும் பொழுது வேண்டும்

சுழன்றடிக்கும் துயர்ப்புயலில் மோதி மோதி
சுதந்திரங்கள் போச்சுதடா, மேடை தன்னில்
முழங்கியநம் தலைவர்களால் முப்ப தாண்டு
முறைக்குமுறை பேச்சென்று காலம் போச்சு
களங்களிலே...... எம்மிளைஞர் துவக்குத் தூக்கி
கால்கடுக்க நிற்பதினால் இளமை போச்சு
விளங்குகிறதா எங்கள் நிலை நாளை யிந்த
வில்லங்கம் தீர்வதற்கோர் முடிவு வேண்டும்.

அள்ளிநம் கையாலே உண்ட மண்ணில்
அலைவதற்கே சுதந்திரங்கள் இல்லைப் பாரீர்
துள்ளிவரும் காற்றதையே மூக்கு முட்டச்
சுவாசிக்கும் சுதந்திரங்கள் இல்லைப் பாரீர்
நள்ளிரவில் ஷெல்லு விழும்; நடக்கும் போது
நாலுபக்கம் குண்டுவிழும் இந்த நாட்டில்
வெள்ளியென்ன திங்களென்ன எந்த நாளும்
விடிந்தவுடன் சாவீடு மரண ஓலம்.

நடுக்கடலில் படகினுக்குக் குண்டு வீச்சு
நான்செய்த தேர்களெல்லாம் நெருப்பில் போச்சு
அடுத்தடுத்துக் கொலைநடக்கும்; அடுத்த நேரம்
அத்தெருவில் ஊர்வலங்கள் ஆட்டம் பாட்டம்
தொடுத்துவரும் இதுதானே ஈழப் பூமி
துயரினுக்கு முடிவொன்று சொல்லு சாமி
விடுதலைத்தீ பரவியெம தின்னல் போக்கும்
விடிகாலைப் பொழுதொன்று விரைவில் பூக்கும்.

*களத்திலே மலர்ந்தவை*
*1988*

# முலை பார்த்த வெண்பாவை மூடு

நெஞ்சை நிமிர்த்தி
எம் நிலம் எழுந்துபோராடும்.
அஞ்சற்க! என்று அறிவித்து
எம் பிள்ளைகள்
நிலத்தில்
வான் பரப்பில்
நீலத் திரைகடலில்
பலத்தோடு வந்து பார்க்கும் எதிரிகளை
கலக்கியடித் தெம்மைக் காப்பாற்றும் காலமிது.
தாயென்றும், தளிரென்றும்
தள்ளாடும் கொடியென்றும்
பூவென்றும் முன்னைப் புலவர்களால்
உவமை சொன்ன
பெண்ணும் எழுந்து போராடும் நேரத்தில்
இன்னும் இதைப்பாட எண்ணாத பாவலரின்
கண்கள் திறக்கும் காலமினி எப்போது?
விலைபேச முடியாத வீரங்கள்
களமாடிச்
சிலையாகி நிற்கும் தேசத்தில்
இன்னும் தான்
முலைபார்த்து
வெண்பா முன்னூறு எழுதுகின்ற
மனிதா!
உனக்கென்று மானத்தின் பொருள் விளங்கும்?
இனிதா உனக்கிந்த இழிநிலை?
விழிதிறவாய்!
கவிஞா! எழு
இந்தக் காலத்தைப் பதிவுசெய்.

*வெளிச்சம்*
*ஆவணி 1993.*

# பள்ளிக்குப் போன பிள்ளை ஏன் வரவில்லை?

இளந்தளிரே!
நீ எங்கே?
எருக்கும்பம் போன்ற
சதைக் கும்பத்துக்குள்ளே
உன்னை எப்படித் தேடுவேன்?
கையெது
காலெது
மெய்யெது என்று
இனம் காண முடியாத
இறைச்சிக் குவியலுக்குள்ளே
இது தான் என்மகள் என்று
உன்னை எப்படி இனம் காணுவேன்?
இளந்தளிரே!
நீ எங்கே?
அன்றும் வழமை போல் தான்
விடிந்தது.
எழுவான் திசையில் கதிரோன் எழுந்தான்
அதுபோல நீயும் அழகாய் எழுந்தாய்
'அம்மா இன்று பரீட்சை' என்றாய்
படித்தாய்
குளித்தாய்
சாப்பிட்டாய்
அறைக்குள்ளே சென்றாய்.

வெள்ளைப் புறாபோல் வெளியே வந்தாய்
துள்ளிக்கொண்டு சைக்கிளில் ஏறி
சென்றாய்.
வருவேன் என்று சொல்லிப் போனாய்
ஏனம்மா வரவில்லை?
இளந்தளிரே!
உன்னை எப்படித் தேடுவேன்.
ஐந்தாம் வகுப்பு 'ஸ்கொலசிப்பில்'
அதிகம் புள்ளிகள் பெற்றவள்
ஆனநீ
எப்படித் தெருவில் இப்படிப் போனாய்
'உத்தம சனாதிபதி'
உனக்களித்த சீருடையைத் தானே
அணிந்து சென்றாய்.
'மேன்மை தங்கிய பெரியவர்' தந்த
பாடநூல்களைத் தானே சுமந்து சென்றாய்
இருந்தும் நீயேன் இப்படி ஆனாய்?
'இராச வீதியில்....'
என் இளவரசிக்கு என்ன நடந்தது?
'சிவப்புச் சிலுவைக் கொடிகள்' பறக்கும்
'சிறுவர் பாதுகாப்பு நிதியத்துக்கு'
அருகில்
உன்னை ஏன் இப்படிப் பிச்செறிந்தார்கள்.
'சுப்ப சொனிக்' அடித்த தென்றார்கள்
உன்மீதுதான் குண்டுகள் வீழ்ந்ததென்று
அப்பனிவன் எப்படி நம்புவேன்.
பள்ளிப் பிள்ளைகள் செத்த தென்றார்கள்

அவர்களில் நீயும் ஒருத்தியென்று
எப்படி நான் நினைப்பேன்.
'உத்தமர்' தந்த 'வெள்ளைச் சீருடை'
'இலவசமான பாடப் புத்தகம்'
உன்னிடம் இருந்த போதும்
அவர்கள்
எப்படி உன்மேல் குண்டுகள் வீசலாம்?
'இயந்திரக் கழுகில்' ஏறிவந்து
இங்கே குண்டுகள் வீசும் 'அவனுக்கு'
எந்தன் துயரம் எப்படிப் புரியும்.
கொழும்பில் இருந்து
அவனை ஏவி
குண்டை வீசெனச் சொல்லும் தளபதி
நாங்கள் துடிப்பதை எப்படி அறிவான்
'ஞானமுருகன் கோவில் மண்டபம்'
'தேங்காய் சண்முகம் வீடும்'
வீதியும்
புலிகள் இருக்கும் குகையா?
இல்லையே!
அப்படியாயின் இவைகளின் மீது
எப்படிக் குண்டுகள் எறிந்திடமுடியும்?
தமிழனுக்குப் பிறந்த தளிரே!
தமிழச்சி என்பதற்காகவே
நீ சிதைக்கப்பட்டாய்.
தமிழர் நிலத்தில் வளர்ந்ததுக்காக
பனைமரங்கள் கூடப் படுகாயம் அடைகின்றன.
மாடிவீடுகள் மரணிக்கின்றன.

சின்னக் குடிசைகள் கூடத் தீக்குளிக்கின்றன.
என்மகளை மட்டும் எப்படி விடுவார்கள்.
ஆம்
என் உதிரப் பூவே!
தமிழிச்சி என்பதற்காகவே
நீ சிதைக்கப்பட்டாய்
சங்காரமான 'வை – 8' போல
சுப்ப சொனிக்கும் தீப்பிடித்தெரியும்
என்றொ ஒரு நாள்
எங்கள் பிள்ளைகள்
இந்தக் கழுகையும் சுட்டு வீழ்த்துவர்
அன்று நான்
இராசவீதியில் நிமிர்ந்து நின்று
ஆடிப்பாடி அகமகிழ்ந்திடுவேன்.

*விடுதலைப்புலிகள்*
*ஆடி 1993*

# தலைவன் வாழி!

பொங்குமா கடலின் ஓரம்
பிறந்ததோர் புயலின் மையம்
தங்கமண் நெடுநாள் செய்த
தவத்தினால் உதித்த பையன்
வெங்களம் ஆட என்றே
வேங்கையாய் நிமிர்ந்த தீரன்
எங்களின் தலைவன்; 'தம்பி'
இந்தநூற் றாண்டின் வீரன்.

தூங்கிய தமிழர் நெஞ்சை
துடித்திடச் செய்தோன்; ஈழம்
வாங்குவோம் எழுக! என்றே
வாலிப மனத்தை வென்றோன்
வேங்கைகள் சாவுக் கஞ்சா
வீரர்கள் என்றே சொல்லத்
தாங்கிய தலைவன்; எங்கள்;
தளபதி! அன்புத் தம்பி!

ஆயிரம் களங்கள் கண்ட
அண்ணனை; தமிழீ ழத்தின்,
பாயிரம் ஆகப் போகும்
பரணியின் தலைவன் தன்னை
ஏவிய படைகள் வந்து
என்னடா செய்யும், எங்கள்,
காவியம் களத்தில் வெல்லும்.
காலங்கள் அவன்பேர் சொல்லும்.
எத்தனை புயல்கள் வந்து

எழுந்தன; தலைவன் தன்னை;
எத்தனை படைகள் ஒன்றாய்
எதிர்த்தன. துரோகக் கும்பல்
எத்தனை விதமாய் சொல்லி
இகழ்ந்தன. இடையில் விட்டு
எத்தனை பேர்கள் சென்றார்.
இறுதியில் தலைவன் வென்றான்.

கொட்டடா! முரசு; எங்கே
கொம்பது எடுத்து ஊது.
தட்டடா! கைகள், எங்கள்
தலைவனைப் பாடு. எம்மை
முட்டிய துயரம் யாவும்
முடிந்திடும். புலிகள் சேனை
எட்டிய வரையும் பாய்ந்து
எழுந்திடும். தலைவன் வாழி!

*வெளிச்சம்*
*கார்த்திகை – மார்கழி 1991*

## ஈழநாதமே எங்கள் இதயநாதமே!

ஈழநாதமே!
எங்கள் இதயநாதமே
உனக்கு அகவை மூன்றாச்சு?
நேற்றுப் போலிருக்கிறது உன்பிறப்பு.
உன் ஜனனம் நிகழ்ந்ததும்
சிலர் ஜாதகம் கணித்தனர்.
அபசகுனமாக
அற்ப ஆயுள் என்றனர்.
இன்று நீ நிமிர்ந்து நடக்கின்றாய்
காலத்தின் குரலாக உன்நாத ஒலி
காதில் விழும் போதெல்லாம்
நெஞ்சம் மகிழ்ச்சியால் நிரம்புகிறது
காலை விடிய எம் வாசலில் வந்து
கதவை நீ தட்டும் போது
அந்த முழுநாளுமே ஆனந்தமாய்க் கழிகிறது
அட்டதிக்குகளையும் அருகில் வரச்செய்யும்
அதிசயம்
உனக்கு மட்டும் தெரிந்த ரகசியம்
ஊரெல்லாம் சேர்த்த உண்மைகளைக் கொண்டு
ஒருமாலை கட்டுகின்றாய்.
உலகத் திசையாவும் அலசி, அதிகாலை
உலை மூட்டிப் படைக்கின்றாய்.
'ஊரெல்லாம் கூடி ஒரு தேர் இழுப்பது போல்'
ஒரு நூறுபேர் சேர்ந்து
உனக்கு ஒப்பனைகள் செய்கின்றனர்.
காலையில் நீ
கைவீசி நடக்கவேண்டு மென்பதற்காக
சிலருக்கு
எல்லா ராத்திரியும் சிவராத்திரியாகிறது.

'அழகன்' உன்னை அழகாக்கினான்.
அடுத்து வந்தவன்
உனக்கு வளம் சேர்க்கிறான்.
சரித்திரம் படைக்கும் தலைவனின்
செல்லப் பிள்ளை நீ.
அதனால் உனக்குத் தொல்லைகள் இல்லை.
களத்தில் வீரர்கள் புண்படும் போதெல்லாம்
கண்ணீர் வடிக்கின்றாய்
எதிரியின் பாசறை எரிந்திடும் போதினில்
எழுந்து நீ பாடுகின்றாய்.
இந்த உறவு எப்படி வந்தது?
உன் ஆணிவேர் இந்தப் பூமிக்குள் தானே
புதைந்திருக்கிறது.
உன் வாசலுக்கு வரும் ஒவ்வொரு தடவையும்
நான் பெருமையால் நிமிர்வதுண்டு.
ஏனென்று தெரியுமா?
எங்களால் எதுவும் முடியும்
என்பதற்காகவே!
'தமிழீழம் பிறந்தது'
ஒரு நாள் இது உனக்குத் தலைப்புச் செய்தி
அதுவரைக்கும்....
அப்பாலும்... பலகாலம்
இப்பாரில் நீ வாழ்வாய்.
'ஈழநாதமே!'
எங்கள் இதயநாதமே!
உனக்கு வாழ்த்தெழுதும் ஒவ்வொரு வருடமும்
நான் வாழ்வேன்.
என் வாழ்த்தும் உனக்கு வாழ்வளிக்கும்.
'ஈழநாதமே!' வாழி!

*ஈழநாதம்*
*19.02.1993*

# பல்லாண்டு வாழப் பாடுவோம்

மரகத நிலமும் எங்கள்
மாதவ மொழியும், வாழ்வும்
வதைபடக் கண்டும் நாங்கள்
வளைந்துபோய் இருந்தோம்; எங்கள்
உதயமே! தமிழர் நெஞ்சில்
உணர்வினைத் தந்தாய், 'நாமும்
உதைக்கலாம்' எதிரிக் கென்ற
உண்மையைச் சொல்லித் தந்தாய்.

குட்டிடக் குனிந்தோம்; மாற்றான்
குரல்வளை நெரித்த போதும்
கட்டுண்டு படுத்தோம், மூச்சுக்
காட்டிடா திருந்தோம், 'நெற்றிப்
பொட்டிடக் கூட அஞ்சிப்
புழுங்கினோம்' தலைவா! உன்கை
பட்டபின் தானே நாங்கள்
பாய்கின்ற புலிகள் ஆனோம்.

இந்தமண் வீரம் கொண்டு
எழுந்திட வைத்தாய், பிஞ்சுச்
சந்தனப் பூவும் இங்கே
சரித்திரம் படைக்கச் செய்தாய்!
'வந்துநம் மண்ணை யாரும்
வளைத்திட முடியா' தென்றாய்,
முந்தைய வீரம் மீண்டும்
முளைத்திடச் செய்தாய்; வாழி!

தமிழரை யார் தொட்டாலும்
தலைவன்கை அவனைக் குட்டும்
தமிழரைப் பழிக்கும் எந்தத்
தலையையும் அவன்கை வெட்டும்
தமிழரைக் காக்கும் எங்கள்
தலைவனை வாழ்த்தி வாழ்த்தித்
தமிழரெல் லாரும் பாடித்
தாங்குவோம்; தலைவா! வாழி!

ஐயன் பல்லாண்டு காலம்
அழகொடும், வீரத் தோடும்
வையகத் திருக்க வேண்டி
வாழ்த்துவோம் வேங்கை வீரன்
கையினைப் பற்றி நாங்கள்
களத்தினிற் குதிப்போம், வெற்றி
எய்துவோம், பரணி ஒன்றை
எழுதுவோம் தலைவன் வாழி!

*வெளிச்சம்*
*மார்கழி 1992*

# இருந்து இசையாள வேண்டும்

அண்ணனே உனக்கு இன்று
அறுபது வயதா? இல்லை
இன்னுமோர் அறுபதாண்டு
இருந்திடும் இளமை உண்டு
சந்நிதி யிருந்து சொல்லும்
தமிழ்க்கவி பலிக்கும் கேளீர்
இன்னும் பல்லாண்டு காலம்
இருந்திசை ஆள வேண்டும்.

பெறுமதி மிகுந்த நாதம்
பெருங்குழற் கோவே! இன்று
அறுபது அகவை காணும்
அழகனே! மலர்ந்த காவே!
கருவிலே..... திருவும் கொண்ட
கலைஞனே! பத்ம நாதன்
உருவிலே... எம்மோ டிங்கு
உலவிடும் இசையே வாழி!

அம்மணி; எங்கள் நாத
அரசனோ டிணைந்து வாழும்
பொன்மணி உம்மை வாழ்த்திப்
போற்றிடத் தானே! நாங்கள்
இம்மணி விழாவைச் செய்தோம்
ஈஸ்வரித் தாயே! எங்கள்
கண்மணி; கான வேந்தன்
காதலி வணக்கம் வாழி!

சந்தன நிறத்தில் பட்டுச்
சட்டையும், நெற்றிப் பொட்டும்
செங்கனி வாயில் மெல்லச்
சிவந்த வெற்றிலையின் சாறும்
சங்கிலிக் கழுத்தும், இன்பச்
சரசம்செய் சிரிப்பும்; நாதம்
பொங்கிடும் குழலும் உன்னைப்
போற்றிடச் செய்யும் ஐயா.

காற்றிலே.... உனது நாதம்
கலந்துவந் தெங்கள் காதில்....
ஏற்றிடும் உணர்வை நாங்கள்
எப்படி உவமை சொல்வோம்
நேற்றொடு இன்றும் இங்கே
நின்விரல் வாயும் செய்த
ஆற்றலைக் கவியிற் சொல்ல
ஐயனே! முடியா தையா.

சந்தனக் காற்று மேனி
தழுவுதல் போல... நல்ல
செந்தமிழ்க் கவிதை கேட்டுத்
திளைப்பது போல.... பாலில்
பொங்கிய அமுதை வாயில்
போடுதல் போல.. உந்தன்
சங்கதி, தாளம், ராகம்
தரும் சுவை சிலிர்க்கச் செய்யும்.

விந்தையோ கோடி செய்து
விழுத்துவாய்; குழலில் ஏதோ

மந்திரம் போட்டு எம்மை
மயக்குவாய், நாதா இந்தத்
தந்திரம் எங்கே கற்றாய்
தாய்மடிச் சுகத்தை நாங்கள்
உந்தனின் இசையில் கண்டு
உருகியே மெலிந்தே போவோம்

எதிரியின் வரவைப் பார்த்து
இருந்திடும் வேங்கை வீரர்
அதிசயம் படைக்கும் எங்கள்
அற்புதத் தலைவன் சார்பில்
வதிவிடம் வந்து எங்கள்
வாழ்த்தினைச் சொன்னேன்! நாதப்
பதியென வாழும் வேந்தே!
பத்மநா தனே வாழ்க

*முரசொலி*
*ஆவணி 1992*

# வைகறைப் பொழுதும் வைரவர் கோவில் மூடக்கும்

இன்றும்.... ஒரு காலை
எழுந்து வருவதற்காய்
சென்ற இரவின் திரையைக் கிழிக்கின்ற
வேலை நடக்கிறது.
விடிபொழுது என்றழைக்கும்
வேளைக்கு வரவேற்பு விருந்து கிடைக்கிறது.
மண்ணில் முகம் தெளிவாய்
மலராத பொழுது.
மேலே....
விண்ணின் கிழக்கே
விடிகின்ற அறிகுறிகள்.
'நவீன சந்தை நரசிங்க வைரவர்' க்குப்
பூசை நடக்கிறது.
புதிய எழிலோடு
தூரப் பயணங்கள் தொடங்கும் மினி பஸ்கள்
வீரத் திமிரோடு வெளிக்கிட்டு நிற்கின்றன.
கோப்பிக் கடையான 'றிக்கோ'வுக்குள்
'சீர்காழி'
குரலெழுந்து வருகிறது
தேயிலைக்கு ரத்தத்தைத் தெளித்துவிட்டு
அயலைத் துறந்து வந்து அலைக்கழியும்
மலைநாட்டுப்
பத்துக் குடும்பங்கள் படுக்கும்
நடைபாதை...
துயிலைத் துறக்காது சுருண்டு கிடக்கிறது.

சாரத்தால் போர்த்தபடி சரியான கிழடொன்று
குந்தியிருந்த வண்ணம் கொட்டாவி விடுகின்றது.
இரவெல்லாம்,
இளமையெனும்,
இலையான்கள் மொய்த்திருக்க,
பரபரப்பாய்
சந்தைப் படிகளிலே...
சதை விற்ற
இரவுக் குருவிகளும்
எழுந்து திசைக்கொன்றாய்
விரைந்து பறக்கிறது.
வீரகேசரி,
மூலைக் கடையில் மும்முரமாய் விற்கிறது
காலைக்கு என்றும்
கட்டியங்கள் கூறுகின்ற
முனியப்பர் கோவில் மணியோசை கேட்கிறது.
பளைக்கப்பால்... தினமும்
பஸ்சினிலே போய்வந்து
களைப்பால்....
அரசாங்கக்
கந்தோரில் தூங்குகின்ற
அரச ஊழியர்கள்
அரையுறக்கக் கண்ணோடு
விரைந்து வருகின்ற வேடிக்கை தொடங்குகிறது.
கொழும்பு பஸ்களையே குறிவைத்துக் காத்திருக்கும்
ஏற்றி இறக்கும் எடுபிடிகள்
ராக்சி 'ட்றைவர்கள்'
எல்லோரும் சேர்ந்து ஏதோ கதைத்தபடி
பீடி அடித்து,

பெரிதாய் சிரிக்கின்றார்.
மெல்லப் பொழுது
வெளிறி,
காலையெனச்
சொல்லும்படியாகச் சூடேறத் தொடங்குகிறது.
என்ன அழகான இளம் காலை,
தெருக்களிலே...
பென்னம் பெரிதான,
பெருஞ்சுமைகள் ஏதுமற்ற,
வேளை,
இன்னும் கொஞ்சம்,
விடிந்து விட்டால்,
ஆளை இடிக்கும் அவசரங்கள்,
ஓவென்று
ஓலமிடுகின்ற இரைச்சல்கள்
பட்டணத்தைத்
தின்னத் தொடங்கும்.
செல்வோம்
வசதியெனில்
இந் நேரம்.... நாளைக்கும்
எழுந்து வருவோம்.

*மல்லிகை*
*வைகாசி 1983*

# விடிவுக்குக் காத்திருக்கும் ஒரு சின்னக் கிராமம்

மாசிப் பனிக் குளிரின்,
மடிக்குள்ளே...
அச்சிறிய,
கிராமம் துயில் கொள்ளும்.
பூசிக் கிடக்கின்ற
புகார் இருட்டுப் போர்வைக்குள்
அந்தச் சிறு ஊரும்
அசைவின்றித் துயில் கொள்ளும்.
மின் விளக்கு ஏதும் மினுங்காத
அந்த எழிற் சின்னக் கிராமம்
சீக்கிரமாய் துயில் கொள்ளும்.
ஓலைக் குடிசைக்குள்
'உழவு மக்கள்' தூக்கமின்றி
காலை இறைப்புக்காய்...
கண்விழித்துக் காத்திருப்பார்.
சந்தைக்குச் செல்ல...
சரக்கேற்றி
வண்டிலெல்லாம்
அந்த இராப் பொழுதின்
அழிவுக்காய் காத்திருக்கும்.
வேலிகளில்.....
கோழி விடிபொழுதைச் சொல்வதற்கு
காவல் இருக்கும்

கண்விழித்துக் காத்திருக்கும்
ஏற்றி; இறக்காத
இராப் பட்ட விண்சத்தம்
காற்றில் கலந்து
காதுகளில் நின்றொலிக்கும்.
'செக்கன்ஷோ' பார்த்து
செல்லுகின்ற வண்டிலதின்
சக்கரத்தின் ஓசை
தலைவாசல் மீதிடிக்கும்.
'சங்கக் கடை வாச்சர்
தம்பண்ணர்' இருமுகின்ற
சிங்கக் குரல் கேட்டு
சிலவேளை நாய் விழிக்கும்
நாய்விழித்தால்... பின்னர்
நடுராவில் ஊளையிடும்
பாய்விட்டு எழுந்து
பலபேர்கள் சுருட்டடிப்பார்.
கையணைப்பில் சிக்குண்டு
களைத்த இளம் உடல்கள்
பெய்யும் பனிக் குளிரால்....
பிறகும் இணைந்து கொள்ளும்.
கிழக்கில்.....
சிறு வெளிப்புக்
கீறல்கள்....
சேவல்கள்,
வழக்கம் போல்...,,
இன்றும்

வரவு சொல்லும் வாழ்த்துக்கள்.
தோட்டக் கிணறொன்றின்
துலாவிலிருந்து....
சினிமாவின் பாட்டொன்று வந்து
பரவெளியில் கலக்கிறது.
'அரசவெளி அம்மன்'
ஆலயத்தின்
பூசைக்காய்
விரையும் குருக்களுடன்
விடிபொழுது போட்டியிடும்.

*மல்லிகை*
*தை 1983*

# நெருப்பு வீசும் நிலவு

இந்த நிலாக்காலம்
எப்போதும் இப்படித்தான்
எந்தவித மாற்றம் இல்லாமல்...
அப்படியே;
இந்த நிலாக்காலம் எப்போதும் இப்படித்தான்.

முந்தி நிலா நாளில்...
முற்றத்தில் கோடிட்டு
கெந்தியடிப்போம்.

கிளித்தட்டு,
வாரோட்டம்,
என்று களிப்போம்.
எப்போதும் விளையாட்டே
இன்று அதை நினைக்க...
இருபத்தைந் தாண்டுகளின்
முன்னர் நிலாக்கால முசுப்பாத்தி தெரிகிறது.

இன்றும் நிலவு,
இளமை நினைவுகளில்
நின்று,
மனமேனோ நெடுமூச்சு விடுகிறது.
காலம் விரிந்தது தான்.
கண்மூடித் திறப்பதற்குள்

ஞாலம் விரைந்து நடந்து பறக்குது தான்.
என்றாலும்
அந்த இளம் காலம் தடம் பதித்து
நின்ற இடம்
என்னுள் நிலை கொண்டிருக்கிறது.

எங்கும் வயல் நிலத்தில் எழிலாய்ப் பயிரிருக்கும்
பொங்கும் நிலா வொளியில்
பொற் கதிர்கள் அழகொளிரும்.
குளம் நிரம்பி வழியும்,
குறுமீன் தெறித்தோடும்,
பழம் சொரியும் ஆலமரம் பக்கத்தே தலையசைக்கும்
ஆலமரத்தின் மேல் அழகுநிலா எழுந்து வரும்
பாலைச் சொரிந்தபடி பவனி வரும் அந்த நிலா.

இந்த நிலாக்காலம்
எப்போதும் இப்படித்தான்
எந்தவித மாற்றம் இல்லாமல்...
அப்படியே.

இந்த நிலாக்காலம் எப்போதும் இப்படித்தான்.
இந்த நிலவினிலே இம்மியதும் மாற்ற மில்லை
நாங்கள் தான் மாறி நடக்கின்றோம்,
தூங்கமுடியாமல் துவண்டுள்ளோம்.
வாய் திறந்து,
பேச முடியாது பேச்சிழந்து போய் விட்டோம்.
வீசும் பொருளாகி வீதியிலே கிடக்கின்றோம்,

யாரும் நிலா முகத்தை
ரசிக்கின்ற நிலையில்லை
யாரும் வயல்வெளியில்
நடை பயிலும் நிலையில்லை
அந்தக் குளம்கூட அழகிழந்து கிடக்கிறது.
அந்தக் குளத்தின் அருகிலுள்ள ஆலமரம்
அப்படியே பேச்சற்று, அசைவின்றித் தூங்கிற்று.
எப்படித்தான் பேச்சு வரும்
என்பது போல்,
எல்லாமே,
தூக்கக்கலக்கத்தில்
துவண்டு கிடக்கிறது.
ஏக்கத்தில் அந்த நிலா
எனைப்பார்ப்போர் யாருமிலர்
என்ற நினைப்பில் இருள்மேகத் திரைக்குள்ளே..
சென்று மறைகிறது.
திரும்ப இனி எப்போதோ?
நல்ல நிலாக்கால நாளிற்தான்
தமிழர்கள்
எல்லா விழாவுக்கும் ஏற்பாடு செய்வார்கள்
வல்லிபுரக் கோவில்....
வற்றாப்பளையம்மன்.....
நல்லூர்,
காரைநகர்...
நயினை நாகம்மை,
என்றே
நாம் தெய்வ விழா

எடுப்பதுவும் நிலா நாளே

இன்றெங்கும் கார்கள்
இல்லையிது அந்நாளில்
அங்கங்கு உள்ள அம்மனுக்கு விழாவென்றால்,
எங்கெங்கும் பரபரப்பு,
எவ்விடத்தும் நீர்ப்பந்தல்
தங்கி இளைப்பாறச் சத்திரங்கள்
துணையின்றி,
நம்பி உலாவரலாம் யாருக்கும் பயமில்லை.
பொங்கும் நிலா நாளில்
போய்வரலாம் பயமில்லை
வண்டிலிலே.. நாங்கள் வல்லிபுரக் கோவிலுக்குச்
சென்று வந்த நாளெல்லாம்
தெரியும்;
நினைவிருக்கு.
தம்பப்பா,
செவிட்டுச் சரவணையர்,
உலக்குளத்துச் சம்பரியான்
இவர்களிடம் சவாரி விடும் வண்டிலுண்டு.
வண்டிலிலே நாங்கள் வல்லிபுரக் கோவிலுக்குச்
சென்று வந்த நாளெல்லாம்
தெரியும்;
நினைவிருக்கு,
இன்றிவைகள் யாவும் இயலாத காரியங்கள்
சன்னதிக்குக்கூடச் சாகத் துணிந்தவர்கள்
மட்டுந்தான் போக முடியும்.

மற்றவர்கள்
எட்ட இருந்தபடி இருந்தெழும்ப வேண்டியதே.
கோட்டை முனியப்பர் கோவிலினைக்
கண்ணாலே...
பார்த்தவரைப் பார்த்துப் பலகாலம் ஆகிவிட்ட
நேச்சரிலே
ஏன் தான் நிலா ஆசை விட்டிடலாம்.
நாங்கள் பிறந்த நிலம்,
நாம் மிதித்து நடந்த நிலம்,
தூங்கி மகிழ்ந்த நிலம்,
சுடுகாடாய்ப் போனதுவே,
பண்ணைக்குப் போய்வரவே பயமென்றால்....
எங்களது
மண்ணுக்கு வந்த மாரடைப்பை மாற்றுவதார்?
இந்த நிலாக் காலம்
எப்போதும் இப்படித்தான்
எந்தவித மாற்றம் இல்லாமல்
அப்படியே...
நாங்கள் தான் மாறி நாறிக் கிடக்கின்றோம்
தூங்கமுடியாமல் துவண்டுள்ளோம்.

*மல்லிகை*
*கார்த்திகை 1985*

# சாட்சிகளற்ற சாமப்பொழுதும் ஒரு உறக்கம் வராத கவிஞனும்

ஊரயர்ந்து உறங்கிக் கிடந்தது.
ஊளையிட்டதோர் நாய் சுருண்டது.
தாரிழந்ததோர் வீதியில், வண்டிலின்
தாளவாத்தியம் காதில் இடித்தது.
வீரெனச் சிறுபிள்ளை அழுதது,
வீசும்காற்றிலே ஏறிக் கலந்தது.
சீரழிந்ததோர் நாடெனச் சொல்லியே,
சிற்சிலவெடிச் சத்தங்கள் கேட்டன.

மட்டையேற்றிய வண்டில்கள் வந்தன.
மாடவிழ்த்துக் கட்டிய மானுடர்,
சட்டநாதரின் கோவிற் கிணற்றிலே,
தண்ணியள்ளிக் குடித்துச் சரிந்தனர்.
கட்டைராசுவின் கடையடிப்பக்கமாய்
கசிப்படித்தவர் 'தத்துவம்' பேசினர்.
கிட்டவாயொரு 'கிறனேட்' வெடித்தது.
கிலியடைந்தவூர் எழுந்து, படுத்தது.

அரிவுபட்டடை 'வாச்சர்' எழுந்துமே,
அங்குமிங்குமாய்க் கொஞ்சம் உலாத்தினார்.
பெரியமாவடி குந்தி இருந்துமே,
பெய்தபின்புபோய் மெல்ல உறங்கினார்.
நெரிச்சலின்றியே வீதி கிடந்தது.

நிறைய ஏற்றிய லொறி நகர்ந்தது.
எரியவேண்டிய வீதி விளக்குகள்
எதுவுமற்றதால் இருண்டு கிடந்தன.

நள்ளிராவெனச் சூழல் உரைத்தது.
நாய்கள் கூடியே பேசிக் களித்தன.
கொள்ளை கொள்ளையாய் முல்லை மலர்ந்தன.
குண்டுமல்லிகை பூத்துச் சொரிந்தது.
தள்ளியிருந்ததோர் அகதி முகாமிலே
தாறுமாறெனச் சத்தங்கள் கேட்டன.
துள்ளிவந்ததோர் வண்டியில் ஏறியே,
துவக்கு ஏந்திய இளைஞர் பறந்தனர்.

நேரமென்னவோ? ஒன்றிரண்டிருக்கலாம்
நேற்றுப் போலோரு சண்டை தொடங்கலாம்
கோரமானதோர் நிகழ்வு நடக்கலாம்
'ஹெலி'யில் வந்தெமைச் சுட்டு விழுத்தலாம்
தூரயிருந்தொரு துவக்கு வெடிக்கலாம்.
துடிதுடித்தொரு சீவன் அடங்கலாம்.
ஈரமானதோர் நெஞ்சுள யாருமே
இங்கிருப்பது இல்லையென் றாகலாம்.

எந்தநேரமும் குண்டுகள் வீழலாம்
எதிரிபோலெமைக் கொன்று குவிக்கலாம்.
பந்தமேந்திய அக்னிப் பேய்களின்,
பற்களெங்களைப் பசிக்குண வாக்கலாம்.
சொந்தநாட்டிலே அந்நிய ராயினோம்.

சுகமிழந்ததோர் தலைமுறை யாயினோம்
விந்தையானதோர் நாடிது, ஆயினும்
விடிவுகாலமோ அண்மையில் ஆகலாம்.

பொன்கொழித்தயிப் பூமியை, இப்படி
பேயுலாவிடச் செய்தது எப்படி?
மண்ணிழந்தவர் ஆனது எப்படி?
மகிழ்ச்சிவிட்டெமைப் போனது எப்படி?
'என்ன தேசமோ என்ன தான் நீதியோ'
எங்களுக்காகவே எழுதிய பாடலோ?
கண்ணயர்ந்துமே தூங்கிக் களித்திடும்
காலம் வந்தினி எப்படிச் சேருமோ?

முன்னர் நினைத்ததும் பட்டணம் போகலாம்
முற்றவெளியினிற் சற்று அமரலாம்.
பின்னரெழுந்துமே 'தண்ணி' அடிக்கலாம்.
புல்லுக் குளத்தடிக் கல்லில் இருக்கலாம்.
பண்ணைக் கடற்கரைப் பக்கம் நடக்கலாம்.
பத்துமணிவரை இலக்கியம் பேசலாம்.
கண்ணையிடுக்கிடில் மெல்ல எழுந்துமே,
கடைசிபஸ்சிலே வீடு திரும்பலாம்.

எங்கள் வானிலே கருமுகில் சூழ்ந்தது.
இடிமழை புயலென அழிவுகள் சேர்ந்தன.
துங்கமாமணித் தீவு அழிந்தது.
தூசிபடிந்தொரு சோகம் மிதந்தது.
இங்கு புதியதோர் சக்தி பிறந்தது.

பிஞ்சுகளிலே யார் தான் பிடுங்கப்படுவாரோ?
குஞ்சுகளிலே இன்று குறிவைத்த குஞ்செதுவோ?
நெஞ்சு பதற நினைத்துத் துடிக்கின்றேன்.
நாளை விடியும்,
நான் எழுந்து பல் விளக்கும்
வேளையொரு சேதி விடிய முன்னர் வந்து விழும்.
சந்தியிலோ அன்றி சவுக்கு மரத் தோப்பினிலோ
எந்த மதவினிலோ எவருக்கு முடிவுரையை
இந்த 'ட்ரக்' எழுத....
இப்பொழுது ஓடுகுதோ?
இராணுவத்தின் வண்டி இரைச்சலிட்டபடி செல்லும்
காரணத்தை அறிந்து கொண்டும்
கட்டிலிலே கிடக்கின்றேன்.
பாதியிரவில் பாய்ந்தார்கள்
என்ற செய்தி
காதில் விழுந்தவுடன் கட்டாயம் வந்து விழும்.
நெஞ்சு பதற நினைத்தபடி
நான் சாக்கு,
மஞ்சத்தில் கிடக்கின்றேன்.
மனிதம் துடிக்கிறது.
'போதி மரத்துப் புத்தா' உன் போதனைகள்
பாதி இரவில் பழிக்கப்படும் போது,
நீதிக்காய் எங்கள் நிகழ்காலம் நிமிர்கிறது.
உண்டுடுத்து நாங்கள்
உறங்கும் சிறு குடில்கள்,
இன்று மட்டும்..... ஏனோ
எரிக்கப்படும் போது,

எங்கும் போல் இங்கும் எதிர்காலம் நிமிர்கிறது.
கங்குல் திரைகிழிக்கும் கைகள் திரள்கிறது
எந்தத் தீப்பிம்பும்
எரித்து விட முடியாத
அந்த இளம் மலர்கள்
அனலாற்றில் பூத்தவையே.
சாத்தானின் வேதம் தாய்வீட்டில் கேட்கையிலும்
பார்த்துக் கிடந்து பயந்தொழிக்கா இளசுகளின்
பூபாளராகம் புலரியிலே கேட்கிறது.
பாதாளம் வரை சென்று
பாயும் கவிதைகளால்...
வேதாளம் ஏறி விடுகின்ற முருங்கை மரம்
நாளை சரியும்......
நமக்கெல்லாம் நல்லதொரு
வேளை பிறக்கும்.....
விடிவுக்குக் காத்திருப்போம்......

*மாற்று*
*1986*

# மரணங்கள் மலிந்துவிட்ட பூமி

மான் சுட்டால்.... அன்றி
மரை சுட்டால்.... மயில் சுட்டால்
ஏன் என்று கேட்க இந்நாட்டில் சட்டமுண்டு
மாடடித்தல் கூட, மறைவான ஓரிடத்தில்
சாகடிக்க வேண்டுமெனச்
சட்டத்தில் இடமுண்டு.
கொக்குச் சுடுதல்... குற்றம்
பயிரழித்து
திக்கெட்டும் நடந்து திரிகின்ற ஆனையினை
சுட்டால்........ அது குற்றம்
'சுதந்திரபூமியிலே.......'
சட்டம் இதற்கெல்லாம் தண்டிக்கும்;
தண்டிக்க வேண்டியதே.
நாய்பிடிக்கக் கூட நகரசபைக் காரர்கள்
நீபிடிக்கலாமென்று நியமனங்கள் செய்துள்ளார்
மானுக்கு
மாட்டுக்கு....
மரையோடு.... மயிலுக்கு
ஆனைக்குக் கூட அனுதாபப்படும் நாட்டில்
மனித உயிர் மட்டும் மலிவு
மிக மலிவு.
துப்பாக்கி வாய்க்கு பூச்சூடும் பூமியிது
எப்போதும் நாங்கள் இறப்பதற்கே காத்திருப்போம்.
வீதியிலோ..... அன்றி வீட்டினிலோ.......
பள்ளியிலோ
பாதியிரவினிலோ..... பஸ்சினிலோ....
படுக்கையிலோ

நாங்கள் சுடப்படலாம்
நாய்போல் தெருவினிலே...
தாங்க ஒருவரின்றிச் சவமாகிப் போயிடலாம்.
கல்யாண ஊர்வலமே
கருமாதி ஊர்வலமாய்
மாறிய சம்பவங்கள் மலிவான சங்கதிகள்,
எல்லைப் புறங்களிலே
எழுகின்ற கூக்குரல்கள்
கசாப்புக் கடைகளிலே கதறுகின்ற மாட்டொலிகள்
கேட்க வொரு நாதி
கிளர்ந்தெழும்ப ஒரு கூட்டம்
மீட்க வொரு இயக்கம்
மூச்சுவிட ஒரு கவிஞன்
கட்டாயம் தேவை..... இது
காலத்தின் குரலாகும்
வீட்டுக்குள் இருந்து ரீ.வி. பார்க்கையிலோ.....
பூசை அறைக்குள்ளே பிரார்த்தனைகள் செய்கையிலோ,
நாங்கள் சுடப்படலாம்.
நடுராவில் வந்தெழுப்பும்
பிணந்தின்னிக் கழுகுகளால்
பிணமாகிச் சாய்ந்திடலாம்
எங்கும் இருட்டு
ஏனென்று கேட்பதற்கு
இங்கொருவர் இல்லை.... என்ற இறுமாப்பில்
எங்கும் இருளின் இருளாட்சி,
வீட்டுக்கு வீடு வீதிக்கு வீதியென
நீட்டிக் கிடக்கின்ற நிலமெல்லாம் பேயிருட்டு,
இந்த இருட்டைத்தான்
இல்லாமற் செய்வதற்கு

வந்தவரும் இன்று வழிதவறிப் போனார்கள்
தங்களுக்குள் ஏதோ தகராறுப் பட்டார்கள்
கும்மிருட்டை ஊதிக் குலைப்போம்
எனச் சொன்ன
நம்பிக்கையான நாயகரும்
இருளுள்ளே.....
போனார்கள் இங்கே பொழுதோ விடியவில்லை.
தானாக இந்தத் தனியிருட்டுத்
தீருமெனக்
கோலாட்டம், கும்மி, குரங்காட்டம்
இப்படியாய்
வாலாட்டிக் கொண்டிருந்த வல்லவரைக் காணவில்லை
மீண்டும்.... இருட்டு
மிக இருட்டு..... கண்ணுக்கு
நீண்ட இடமெல்லாம் நிலைகொண்ட பேயிருட்டு
எங்கேனும் ஒளிக்கீறு
ஒன்று தெரிந்து விட்டால்
அங்கே தான் இருட்டின்
அலைக் கரங்கள் மிக அடிக்கும்
இருட்டை ஒழிப்போம் எங்களுக்கென்றோர் இடத்தை
பிடித்தே, அவ்விடத்தில்
பேயிருட்டைச் சங்கரிப்போம்
எல்லோரும் சேர்ந்து இருளழித்தல் கடினமென்றும்
எல்லைகளைப் போட்டால்....
இது சுலபம் என்றுரைத்து
வில்லெடுத்த பார்த்திபரும் விடிவுவரச் செய்யவில்லை
விடிவுக்குப் பூப்பறிக்க....
வெளிக்கிட்ட மின்னல்கள்.......
அழிவுக்கும் தோள்கொடுக்கும் அக்கிரமப் பூமியிது

இறப்புக்குள் வாழ..... இப்போது பழகி விட்டோம்.
சாவுக்குள் வாழ்ந்து சாகத் துணிந்து விட்டோம்.
மரணம் எமக்கிப்போ மலிவான பொருளொன்று
கருச்சிதைவு கூடக் கடும் குற்றம்
இப்போதோ,
தெருக் கொலைகள் இங்கே சிறுவிடயம் ஆகியது.
கேட்க ஒரு நாதி
கிளர்ந்தெழும்ப ஒரு கூட்டம்
மீட்க வொரு இயக்கம்
மூச்சுவிட ஒரு கவிஞன்
கட்டாயம் தேவை...... இது
காலத்தின் குரலாகும்.

*மல்லிகை*
*தை 1986*

# சுதந்திரம் வேண்டும்

பேச என்வாயில் பூட்டுளதிப்போ
எழுத என்கையில் விலங்குளதிப்போ
சிந்தனை செய்ய
யாதொரு தடையும்
இல்லாதிருப்பது என்னவோ உண்மை
சிந்தனை செய்து தெளிந்ததைச் சொல்ல
வாயிலே பூட்டு
கையிலே விலங்கு;
இப்படியான இழிநிலை தன்னில்
சிந்தனை யென்பது தேவையற்றதுவே.
சிந்தனை, ஆய்வு மானிடர் உரிமை;
தெளிந்ததைக் கூறிடல் கலைஞனின் உரிமை.
இரண்டுமே இல்லா.... நாட்டிலே வாழுதல்
இறப்பதும்
இருப்பதும்
சமத்துவம் ஆகும்.

பேச என்வாயில் பூட்டுளதிப்போ
எழுத என்கையில் விலங்குளதிப்போ
விடுதலை என்பது.....
விலங்கினை உடைத்தல்
விடுதலை என்பது....
சிறகினை விரித்தல்
பூட்டுக்கள் உடைத்து, புதியதோர் விலங்கை
மாட்டுதல் அல்லவே சுதந்திரமென்பது!
மண்ணிலே பிறந்த மறுகணப் பொழுதே
பின்னிட வலையைப் பொசுக்கிட எழுந்தோம்

பொசுக்கி – எழுந்த போதிலும்
எங்களின்
பூரண விடுதலை தூரவே உளது.

இன்னதை எழுது
இதைவிடு என்று
எங்களுக் கெவர்தான் கட்டளை இடுவார்?
கட்டளையென்பது ஆதிக்க உணர்வு
கலைஞனை மிதித்தால் வேரொடு அழிவு
பேசிடச்
சிரிக்க
ஊர்வலம் போக,
பேப்பரில் எழுதிடச் சுதந்திரம் வேண்டும்,
சுதந்திரம் வேண்டும்! சுதந்திரம் வேண்டும்!
தெளிந்ததைக் கூறிடச் சுதந்திரம் வேண்டும்
இனப்பகை மூண்டு
எரிகிற நாட்டில்.....
ஏழ்மையின் வயிறு
கொதிப்புறு நாட்டில்..
தூங்கிடும் கலைஞனைத் தூக்கிலும் இடலாம்
துணிவிலா இந்தக் கோழையைச் சுடலாம்,
மக்களோடிணைந்த கலைஞனின் கையை
மறுப்பவரெல்லாம் மக்களின் எதிரி.

எதிரிகள் உண்டு! எதிரிகள் உண்டு!
எமக்குள்ளும் இப்போ துரோகிகள் உண்டு
மக்களின் நலனை,
விடுதலைப் போரை,
மறுப்பவரெல்லாம் மக்களின் எதிரி.

மாபெரும் வேள்வித் தீயினில்
சூழ்ந்த
மாசுகள் எரிந்து புனிதங்கள் சேரும்
அக்கினி ஆற்றில் நீந்திடும் மனிதம்
அழிவன போக
அழகுடன் மலரும்
எழு, என இன்று பாடிடும் கலைஞனின்
இளையதோர் பரம்பரை முடிவுரை எழுதும்
முடிவுரை எழுதிடும் கலைஞனின் பரம்பரை
புதியதோர் உலகதின்
முகவுரை எழுதும்
ஆதலால் இன்று சுதந்திரம் வேண்டும்
அடி அடியாகத் தொடருதல் வேண்டும்
மக்களுக்காகவே விடுதலை யுத்தம்
விடுதலை யென்பது மக்களுக்காகவே

பேச என் வாயில் பூட்டுளதிப்போ
எழுத என் கையில் விலங்குளதிப்போ.

*மல்லிகை*
*ஆனி 1985*

# கழுகும் காட்டெருமையும் வயல்காரரும்

எங்கள் வானத்தில் இருளகற்ற இது வரையில்
திங்கள் வரவில்லை
திரண்டகரு மேகமதை
கலைத்துவிட இங்கே காற்றெழுந்து வீசவில்லை
நிலைத்து நிற்கும் வர்க்க
நெடுமலையைத் தகர்த்துவிட
பூகம்பம் ஏதும் பெரிதாய் நிகழவில்லை
ஆரம்பம் போலே....
ஆங்காங்கே சிறுதூறல் வந்தது தான்
ஆனாலும்... வரண்டநிலம் குளிரவில்லை.
இந்த நிகழ்வே தான் இப்பொழுதும் தொடர்கிறது.
காட்டெருமை எங்கள் கடப்புக்குள் மேய்கின்றது.
வீட்டுக்குள் காவலென விட்டநாய்
கடிக்கிறது.
ஆனை திமிர் கொண்டு அலைகிறது,
எங்களது சேனைக்குள் வந்ததும் சிலவேளை மிதிக்கிறது.
அமெரிக்கக் கழுகு அமருதற்கு இடம்தேடி,
குமரிக் கடலோரம் குறிவைத்துப் பறக்கிறது.
கழுகை எங்களது கழுகுமரம் மீதமர்த்த,
தொழுது வரவேற்கும் தொழும்புகளும் நடக்கிறது.
இத்தனையும் நடக்கிறது
என்றாலும் வயல்காரர்
நித்திரையாய்க் கிடக்கின்ற நிகழ்வே தொடர்கிறது.
வயலுக்கு நீர்பாய்ச்ச வாய்த்த கரங்களெல்லாம்
விழலுக்கு நீர் பாய்ச்சல்

விரும்பத் தகும் செயலா?
விழலுக்கு நீர் பாய்ச்சி வேர்த்துக் களைத்த
புயல் காற்றே வா!
உன்னைக் கணக்கிட்டுக் கொள்
பின்னர்
ஆற்றுப்படுத்தி
அளவாக வீசு.
நீரை
வயலுக்கு பாய்ச்சு
வாய்க்காலைச் செப்பனிடு
அயலை எழுப்பு
அதிகாலை ஏர் பூட்டு!

*மல்லிகை*
*1982*

# தேர்தல் திருவிழா

திருவிழா முடிந்தது! திருவிழா முடிந்தது!!
தேசமெங்குமோர் திருவிழா முடிந்தது.
ஆறுநாட்டிய 'அணங்குகள்' ஆடிய
தேர்தல் என்றதோர் திருவிழா முடிந்தது.
பெரிய 'நாட்டியப் பேர்வழி' வெற்றியை
பெற்றுக் கொண்ட பின் திருவிழா முடிந்தது.

'தெற்கு' வீதியில் தேனிசை மாரிகள்
சினிமா நடிகரும் தோன்றி நடித்தனர்.
'வடக்கு' வீதியில் வாணங்கள் ஏறின.
வடலிக் கூடலில் வந்து விழுந்தன.
திருவிழா முடிந்தது! திருவிழா முடிந்தது!
தேசமெங்குமோர் திருவிழா முடிந்தது.

வாக்குச் சீட்டினை உண்டியல் பெட்டியில்
வந்த பக்தர்கள் வாரி வழங்கினர்.
பார்க்க வந்தவர் பார்த்துக் களித்தனர்.
பக்தர் சிற்சிலர் பார்க்கா தொதுங்கினர்.

'தோட்டக்காடெ' னச் சொல்லிய ஊரிலே
காட்டிக் கொடுப்பவர் கூட்டிக் கொடுத்தனர்
செய்தி போட்டிடும் 'தினசரி' க் காரரும்
பொய்யை மட்டுமே போட்டு நிரப்பினர்

வீதியெங்கணும் தோரண வாசல்கள்
வீரம் பேசிய மேடைகள் ஆயிரம்
'நீதியாய் ஒரு சமூகம் ஆக்குவோம்
நிச்சயம் இது' என்றவர் ஓர் புறம்

இந்த நாட்டிலே.... பொதுமையைத் தேர்தலால்
ஏற்படுத்துவோம் என்றவர் ஓர் புறம்
'அரிசிப் புத்தக' ஆணையைச் செய்தவர்
'அம்மன் தரிசனம்' காணத் துடித்தனர்.

பாணுக்காக வரிசையில் நின்று
பழக்கப்பட்ட ஏழைச் சனங்களே
வாக்குப் போடவும் வரிசையில் நின்றனர்.
வறுமைத் தீயிலே...... வாடிவதங்கியே
பாதை ஓரத்தில் படுத்துப் பழகிய
பஞ்சை மக்களும் பஜனைகள் செய்தனர்.

தேரில் ஏறியெம் 'தேசத் தலைவர்கள்'
மாறி மாறியே மக்களைக் கண்டனர்.
ஊரில் உள்ள 'சின்னத் தலைவர்கள்'
ஓடி ஓடியே ஒத்துப் பாடினர்.

வெளியில் இருந்ததை வேடிக்கை பார்த்திட
விமானத் தேரிலே வெள்ளையர் வந்தனர்
வெற்றி பெற்றிடும் வீரனைப் பார்த்திட
விடிய, விடியவே காவல் இருந்தனர்.

மேற்கு வீதியில் மேளம் முழங்கிட
மேன்மை தங்கிய சாமி எழுந்தது.
சாமி எழுந்தது! சாமி எழுந்தது!
சர்வ வல்லமைச் சாமி எழுந்தது.

'செட்டிமார்' சிலர் தீபம் காட்டினர்
வட்டிக்காரரே வாகனம் காவினர்
திருவிழா முடிந்தது திருவிழா முடிந்தது
தேசமெங்குமோர் திருவிழா முடிந்தது.

மீண்டும் கோவில் வீதி வெளித்தது
காண்டா மணியில் கறள்கள் பிடித்தன
விடிய விடியத் திருவிழா பார்த்தவர்
வீதி ஓரத்தில்..... தூங்கத் தொடங்கினர்.

மீண்டும் விரைவில் திருவிழா என்று
முழக்கமொன்று வீதியில் கேட்டது.
தூங்கிக் கிடந்தவர் சோம்பல் முறித்தனர்
தோரணம் கட்டிடத் துள்ளி எழுந்தனர்.

போதும் போதும் திருவிழா போதும்
பொறுத்தது போதும் திருவிழா போதும்.

*குமரன்*
*கார்த்திகை 1982*

# தென்னிலங்கைத் தோழனுக்கு

நண்பா!
நெடுங்காலம் நாங்கள் முகம் கண்டு
முன்பு
வருடத்தில் மேமாத முதல் நாளில்
சந்திப்போம்.
'புதிய நகரசபை முன்றலிலே'
செங்கொடிகள் தாங்கித் திரிவோம்
தலைவர்கள்,
எங்களுக்குத் தெரியாத எத்தனையோ சொல்வார்கள்
கைதட்டி ஆர்ப்பரித்துக் களிப்போம்.
பிரிந்திடுவோம்.
பொய்யில்லா இந்தப் 'புரட்சிக் கனவு'களில்
மெய்மறந்து தூங்க மேமாதம் வரும்
அப்போ....
மீண்டும் சந்திப்போம்.

வடக்கிருந்து பஸ்ஸில் வருவார்கள் தமிழர்கள்
கிழக்கிருந்து பஸ்ஸில் வருவார்கள் சோனகர்கள்
தெற்கிருந்து பஸ்ஸில் வருவார்கள் சிங்களவர்
எல்லோரும் சேர்ந்து
மேமாத முதல் நாளில்
'வர்க்கப் போர்' பற்றி வாதிடுவோம்.
புரட்சி பற்றித்
தர்க்கங்கள் செய்வோம்
'சமவுடமைச் சமுதாயம்'
பற்றிப் பறைவோம்,
பஸ்சேறித் திரும்பிடுவோம்
கற்பனையில் மீண்டும் களிப்போம்.

இது வழக்கம்.
வடக்கே...
மாவலியின் வருகைக்குக் காத்திருந்து
துடக்காகிப் போனோம்.
தோழா! உன்முகத்தைக்
கண்டு கனகாலம்
கவிதையிலே....... தேசிய நீர்
மொண்டு குடித்ததுவும்,
மேதினத்திற் கூடியதும்,
உண்டன்றி
வர்க்க உறவெல்லாம் கற்பனையா?
வந்து பார்.
எங்கள் வடக்கும், கிழக்கதுவம்
எந்தவிதமான இருள் சூழ்ந்து கிடக்கிறது
அரசபடைகளென்ற
அரக்கர்களின் பிடியினிலே
கரையும் தமிழ் நிலங்கள்
கண்ணீரிற் தெக்கிறது
வெள்ளம் போற் பாய்ந்தார்கள்
வெறியர்கள்.
நாங்களதில்
அள்ளுண்டு போனோம்.
அடக்குமுறைக்குள்ளானோம்
பிச்செறியப்பட்ட பிரேதங்கள்
எங்களது
குச்சொழுங்கையெங்கும்
குடல் சரித்த சடலங்கள்.
பல்லாற் கடித்துப் பதம்பார்த்த முலைகளுடன்
எல்லாம் இழந்து விட்ட இளம் வயதுக் கன்னியர்கள்
சொன்னால் விளங்காது

செவிக்குள் அடங்காது
என்னென்று இதையெழுதி
எப்படித்தான் புரிய வைப்பேன்.
சீனாவில் இருந்து வந்த 'சிவப்புப் பிரசுரங்கள்'
'லெனினின் சிந்தனைகள்'
'மார்க்ஸின்' கட்டுரைகள்
என்னிடத்தில் இப்போது இல்லை
வீடெரிந்த,
அந்நேரம்..... அவையும் அனலிற் கருகியன
உன்னிடத்தில் எல்லாம் உண்டு
என எண்ணுகிறேன்.
இன்றும் ஒரு தடவை எடுத்துப் படித்துவிட்டு
வீதியில் நின்று விளாசு,
உதைபடுவாய்.
மேதினத்தில் நின்று முழங்கு,
சுடுபடுவாய்.
தெற்கே உன்னால் மட்டுமல்ல
வடக்கே என்னாலும் முடியாது-
தேசிய நீருற்றுத் தேங்கியது
எங்களின் மேல்
பூசிய சாயம் கரைந்தது
தோழா!
இங்கோர் புதிய எழுச்சி எழுந்ததுவும்
எங்களுக்கென்றோர் நிலத்தை
எல்லையிட விரும்பியதும்
பூண்டோடெமையழிக்கப் புறப்பட்ட
ஆதிக்கக்
கூண்டை உடைக்க அன்றிக்
குலோத்துங்கன் கதை சொல்லும்
ஆண்ட பரம்பரையின் ஆட்சிக்காய் அல்ல இது

முந்தி வெசாக்கால விடுமுறைக்கு
நான் வருவேன்
சந்திப்பாய்,
வீட்டிற் தடல்புடலாய்ச் சாப்பாடு,
தந்து மகிழ்வாய்.....
தமிழனுக்குப் பாய்விரித்து
நித்திரைக்குப் போகும் வரை
நீயருகில் நின்றிருப்பாய்

சித்திரையில்,
புதுவருடத் தினத்தில் நீ வருவாய்
வந்தெங்கள் வீட்டில்
வடை, தோசை என்றெல்லாம்
உந்தனது ஆசைகளை உரைப்பாய்
சாப்பிடுவாய்
ஆறுமணிக்கெல்லாம் அடிவளவுப் பனையினிலே
ஊறிவரும் கள்ளை உறிஞ்சி மகிழ்ந்திடுவாய்
எங்களுக்குள்ளே
பேதம் எதுவும் இருக்கவில்லை
தங்கச்சி என்றேயென் தாரத்தை நீயழைப்பாய்
இன்றிவைகள் ஒன்றும் இயலாத காரியங்கள்
என்றாகிப் போச்சு.... ஏனென்று புரிகிறதா?
சிந்தித்துப் பார்.
நாங்கள் 'சிவப்பு விடிய' லென்னும்
அந்தத் திருநாளை ஆவலுடன் பார்த்திருந்தோம்.

பேதங்கள் அற்ற 'புரட்சி'க்காய்
நாங்களொன்றாய்
வேதங்கள் சொன்னோம் விடியாமற் போனது பார்
எங்கோ..... யாரிடத்தோ....

எப்படியோ
ஒரு தவறு
இங்கே நடந்திருக்கு இது உனக்குப் புரிகிறதா?
எல்லாம் இழந்த பின்னர்
எதுவுமற்ற நிலையினில் தான்
புல்லாய்
சிறு புழுவாய், புறக்கணித்த வேளையிற்றான்
பேச்சுக்கள்...
ஒப்பந்தப் பேரங்கள்
என்றெம்மை
ஏச்ச பின்பே!
எங்கள் இளைஞர்கள் எழுத்தாளர்கள்
இன்றெழுந்த எங்கள் இளைஞர்கள்
எங்களைப்போல்
நின்று கதைக்கவில்லை, நிறக்கொடிகள் ஏந்தவில்லை
கட்சி அலுவலகக் காரியங்கள் பார்க்கவில்லை
அச்சகங்கள்,
பிரசுரிக்கும் ஆலயங்கள் தேடவில்லை

துச்சமென
இளமைச் சுகங்களையே வீசி விட்டுப்
பிச்செறிந்து கொண்டு புறப்பட்டார்
அவ்வளவே.
இதிலென்ன தவறு இருக்கிறது?
இல்லையெனும்
பதிலே எனக்குச் சரியென்று படுகிறது
ஒன்றாகிப் பக்கத்தில்
உறங்கியதோர் சோதரனைக்
கொன்றொழிக்கும் நோக்கம்
குடிகொண்ட பின்

ஒன்றாய்ப்
பக்கத்தில் என்ன படுக்கை?
பிரிந்திடுதல்
தக்க செயல் தானே.... தவறென்ன இருக்கிறது
முன்பெல்லாம்
சிங்களவர்
தமிழர்
சோனகர்கள் என்றெல்லாம்
எங்களுக்குட் பேதம் எதுவுமிலா ஈழமதைப்
பெற்றுச்
சமதர்மப் பூமியதை உருவாக்கும்
கற்பனையில் மூழ்கிக் களித்தோம்
முடிந்ததுவா?
கந்தையாவோடு களுபண்டா கைகோத்துக்
குந்தியிருந்து
கூழ்குடிக்க எண்ணியது
வந்ததுவா?
பின்னர் வாயடிச்சு என்ன பயன்?
தத்துவங்கள் எல்லாமே சரி.
ஆனால்......
நடைமுறை தான்
ஒத்துவரவில்லை, ஒன்றாக்க முடியவில்லை
இன்னும் முற்றாக இருள்சூழா வேளையிது!
உன்னால் முடிந்தால்....
உன்னைப் போல் ஆயிரம்பேர்,
வீதிக்கு வீதி
வீட்டுக்கு வீடெல்லாம்
நீதிக்குப் பக்கமதாய் நிழல்வரித்து நில்லுங்கள்.

*மல்லிகை*
*ஆடி 1986*

## காற்றெழுந்தால் மட்டும்.....

என்னினிய நாட்டை இணைத்திருக்கும் பாதைகளே!
வற்றாது நகர்ந்து செல்லும் வளமிகுந்த கங்கைகளே!
ஆற்றங் கரைகளிலே... அழகாய் தலையசைக்கும்
வானுயர்ந்த கமுககளே! வடபுலத்துப் புகையிலையே!
'சங்கமித்தா' கொண்டுவந்த வெள்ளரசங் கொப்புகளே
மட்டுநகர் வாவிகளே! மாத்தளையின் மலைமுகடே!
உங்களுக்குள் நாங்கள் ஒருபேதம் காணலையே
எங்களுக்குள் மட்டும் எப்படித்தான் வந்ததுவோ?
சின்னஞ் சிறு தீவு....
சிங்காரப் பொன் தீவு
என்ன விதமாக எழில் போர்த்த எம் தீவு
மோனத்திருக்கையிலே.... மெய்மறந்து
புகை வண்டி
ஓட; அதிலிருந்து...
ஓ.... அந்தக் காட்சிகளை
பார்த்தாலே போதும்
பசியென்ன தாகமென்ன?
கருக்கல் திரைவிலகாக் காலை விடியலிலே.....
கூதலிலே கொடுகிக் கோட்டையிலே புறப்படுமே
'யாழ்தேவி' வண்டி;
அதன் யன்னல் கரையிருந்து
எங்கும் விரிந்திருக்கும் எழிலைப் பருகிடுவோம்
றாகமத்தைத் தாண்டி ரயில்வண்டி ஓடுகையில்
சேற்றெருமை துள்ளும்
திமிர்கொண்டு தொங்கியெழும்
வெற்றுவயல் வரம்பில்
வெண்கொக்குத் தவமிருக்கும்

இந்த அழகிலெல்லாம்....
எத்தனை நாள் மெய்மறந்தோம்
வியாங்கொடையை
வண்டி
விட்டுப் புறப்பட்டால்....
ஆ..... அந்தக் காட்சிகளில்
அங்கமெல்லாம் பூரிக்கும்
வெள்ளை மலர்க்கூட்டம் வீதியுலா வருவது போல்
பள்ளிக்குச் செல்வோரைப் பார்த்து மகிழ்ந்திருப்போம்
இடைதாங்க முடியாத
இளமைச் சுமையிரண்டை
மூடிமறைக்க முயன்று;
தோற்றுப் போய்
குறுக்குக் கட்டோடு குளிக்கின்ற
அழகிகளாம்
சிங்களக் குமருகளைத் தினமும் ரசித்திருப்போம்.
பிஞ்சுக் கையாட்டிப் பிரியமன மில்லாமல்
றெயிலோடு ஓடி
நின்றிளைக்கும் சிறிசுகளை
எண்ணித் தினமும் எங்களையே மறந்திருப்போம்
பொல்காவலை விட்டுப் புறப்பட்டு விட்டாலோ
தென்னை தலையசைக்கும்
தெரிகின்ற மலைச்சரிவு
என்ன அழகாக எழிற்கோலம் பூண்டிருக்கும்
ஒற்றை வரம்பில் ஒயிலாய் நடைபயிலும்
சின்னஞ் சிறுசுகளின் சிற்றிடைகள் நீர் சுமக்கும்
இந்த அழகிலெல்லாம்
எங்களையே நாமிழப்போம்.

........ புகைவண்டி கிழித்துப்

புகுந்து செல்லும் கிராமங்கள்
அந்தக் கிராமத்தின் அறியாத மானுடர்கள்
...... சின்னத் தெருக்கள்
....... சிறுகடைகள்;
பள்ளிவிட்டுச் செல்லும் குடைவிரித்த ரீச்சர்கள்...
இரைச்சலுடன் ஓடும் பழம் பஸ்கள்....
'ஓ' வென்று கத்துகின்ற
ஆற்றின் மேல் போட்ட அழகான பாலங்கள்
வெள்ளரச மரத்தின் கீழ் விகாரைகளும்....
பிக்குகளும்;

இந்த அழகையெல்லாம் இறப்புவரை பருகிடலாம்
என்றிருந்தோம்;
...... இன்றும் இருக்கின்றோம்;
ஆனாலோ

என்னினிய நாட்டை இணைத்திருக்கும் பாதைகளே!
வற்றாது நகர்ந்து செல்லும் வளமிகுந்த கங்கைகளே!
குருநாகல் தன்னில் 'குரும்பை' விற்கும் ஒருவனுக்கும்
றாகமத்தில் நின்று 'ரட்டகஜு' விற்பவர்க்கும்
பயந்து கொண்டு இப்போ பயணம் செயும்
வேளையிலே....
இந்த அழகுகளின் எழிலா பருகவரும்?
முகில் கூட்டம் வந்து மூடியுள்ள வானத்தை
காற்றெழுந்து வீசிக் கலைப்பது தான் மிக நன்று
காற்றும் கலைக்காது கண்மூடிப் போவதெனில்....
என்னினிய நாட்டை இணைத்திருக்கும் பாதைகளே!
வற்றாது நகர்ந்து செல்லும் வளமிகுந்த கங்கைகளே!
இன்றே எழுந்து பேசுங்கள்....
இன்றுவிடல் நன்றல்ல....... நன்றல்ல....... நன்றேயல்ல.....

# மீண்டும் ஒரு முழுநிலவில்

மீண்டும் ஒரு முழு நிலவில்......
வெள்ளை மணற் கடற்கரையில்....
மாண்டவரின் நினைவாக,
மாநாட்டைக் கூட்டிடுவோம்.
எல்லாள மன்னனையே இரங்கலுரை சொல்ல வைப்போம்
அந்த நினைவோடு அப்படியே நாமிருப்போம்
மீண்டும் தீப்பிடிக்கும்.
மெய்நடுங்க மீதியுள்ள,
பூண்டும் கருகிப் பொசுங்கும்.
சிறையிருந்த,
கூண்டுக் குருவிகளும் குருடாகித் தீக்குளிக்கும்.
வார்த்தை வலைக்குள்ளே வளைத்துப் பிடித்திடவே
முடியாத சம்பவங்கள்
மீண்டும்.... மீண்டும்....
மீண்டும் ஒரு முழு நிலவில்
வெள்ளை மணற் கடற்கரையில்.....
மாண்டவரின் நினைவாக
மாநாட்டைக் கூட்டிடுவோம்.
எல்லாள மன்னனையே இரங்கலுரை சொல்ல வைப்போம்
எங்களது வீட்டில் இதுவுமொரு தொடர்கதையே
தொடர்கதைக்கும் முடிவுண்டு
எங்களது
துயர்கதைக்கு முடிவேது?
எங்களது வீட்டினுள்ளே நாங்கள் அந்நியர் போல்
எங்களது வளவினுக்குள் நாங்கள் அகதிகள் போல்...
சீ... என்ன நாய் வாழ்வு?
இந்த நிலையினிலும்

இப்போதும் கேட்கின்றோம்.
கடைசி நொடியினிலும் கைகோத்துக் கொள்ளிடவே
நேசமுகத்தோடே கைகளினை நீட்டுகின்றோம்
இத்தனைக்குப் பின்னும் இப்படி நாம் நீட்டுவது
பயத்தினால் அல்ல....
பயத்தினால் அல்லவே அல்ல....
பாசத்தினால் மட்டுமே
பாதிப்பேர் செய்த பாவச் செயலுக்காய்
மீதிப் பேரை நாங்கள் முழுதும் மறக்கவில்லை
ஆதலினால்....
கடைசி நொடியினிலும் கைகோத்துக் கொள்ளிடவே
நேசமுடனே கைகளினை நீட்டுகின்றோம்
பற்றிப் பிடியுங்கள்!
பற்றிப் பிடியுங்கள்!!
மீண்டும் நாம் மாவலியில்
உரிமையுடன் நீந்த விரும்புகின்றோம்
மீண்டும் சிவனொளிபாத மலையில்
சூரிய உதயத்தைப் பார்க்க விரும்புகின்றோம்
மீண்டும் நாம் நுவரெலியாவின்
கூதல் பனியில் கொடுக விரும்புகின்றோம்
மீண்டும் கட்டுநாயக்காவிலிருந்து தான்
விமானமெடுத்துப் பறக்க விரும்புகின்றோம்
ஆதலினால்...
பற்றிப் பிடியுங்கள்! பற்றிப் பிடியுங்கள்!!
பிடிக்காது விட்டால்.... பிழையெங்கள் மேலல்ல....
எல்லை பிரித்துவிட எங்களுக்கும் விருப்பமில்லை.
பாட்டனது காணியை
பாகம் பிரித்துவிட,
எங்களுக்கும் விருப்பமில்லை.

விருப்பமில்லை என்றாலும்
விரும்பவைத்து விட்டீர்கள்
பற்றிப் பிடிக்காது கைவிட்டு விட்டாலோ
எல்லை பிரிப்பதுதான் எங்களுக்கு உள்ளவழி
உங்களுக்கு கேட்க
உரத்துக் கத்துகின்றோம்.
எல்லை பிரித்துவிட எங்களுக்கும் விருப்பமில்லை.
உள்ளவழி இரண்டு.
நல்லவழி ஒன்றே தான்.
நல்லவழி எது என்று நமக்குத் தெரிகிறது.
உங்களுக்கும் தெரிகிறதா?
தெரியுதென்று சொல்லுங்கள்.
எங்கள்
செவியினிலே...... தேன்பாய.....
மீண்டும்...... மாவலியில்.......
மீண்டும் சிவனொளிபாத மலையில்.....
மீண்டும்...... நுவரெலியாவில்.......
மீண்டும்..... கட்டுநாயக்காவில்.....
ஒன்றாகி,
ஒன்றாகி,
ஒன்றேயாகி.......
பற்றிப் பிடியுங்கள்!
பற்றிப் பிடியுங்கள்!!
பற்றிப் பிடிக்காது கைவிட்டு விட்டாலோ?...

*மல்லிகை*
*மாசி 1984*

# சேது அணைக்கு
# மண் சுமந்த சிறு அணில்

இந்த வருடத்தை
'இறப்பு வருடமென'
இங்கே அமைப்பேதும் ஏற்படுத்திக் கொண்டதுவோ?
மாதம் ஒரு நண்பன்
மக்களுக்கே உரியவர்கள்
சாதல் இவ்வருடச் சாதகமோ?
தெற்கிருந்த
நண்பன் ஒருவன் நமைவிட்டுப் போய்விட்டான்
கண்ணாற் தரிசித்துக் கதைக்காத
தென்னிலங்கை
நண்பன் ஒருவன் நமை விட்டுப் போய் விட்டான்.
சரமகவி அல்ல.... இது
சாவிழுங்கி விட்ட நண்பன்
'அமர' கவி
நெஞ்சை அதிரவைத்த செய்தியதால்
கட்டுடைத்த பாடல்
கல்கிசையில் வாழ்ந்துகொண்டு
மட்டுநகர்,
யாழ்ப்பாணம்,
மன்னார்....... என
நெஞ்சைத்
தொட்டுப் பழகிச் சொந்தங் கொண்டாடியவன்,
விட்டுப் பிரிந்ததினால்...
வேதனைக் குள்ளானவனின்
கண்ணீர் வரிகளன்றிக்,

கல்வெட்டுப் பாடலல்ல
மண்ணே மண்ணின்றி, மரணித்த பிணங்களென
நாளும் சடலங்கள் நடைபாதை எங்கணுமே
வீழும் நிலத்தினிலே
வேதனையே வாழ்வாகிப்
போகும் எமக்கு,
இறப்புப்
புதிதான செய்தியல்ல
கே.ஜி. அமரதாசா!
என்கவிதை இரண்டை
எடுத்து மொழிபெயர்த்து
அந்நியர்க்கு என்னை
அறிமுகங்கள் செய்தவனே
என்றுனக்கு நானெழுதி
இட்ட,
கடிதமதைப்
பார்த்து விட்டுப் பின்னர் பதிலெழுதும் போதினிலே
'அன்பான புதுவை'
அந்நியரா நாமுமக்கு'
என்றெழுதி;
எந்தன் இதயத்தை தொட்டவனே!
எம்மை இணைத்திருந்த பாதைகள் தகர்ந்தன.
இனங்களை இணைத்திருந்த பாலங்கள் உடைந்தன.
ஆனாலும் உந்தன் அரும் பணி தொடர்ந்தது.
இது,
ஐம்பத்தாறு அல்ல..... எண்பத்தாறு
ஈரற்பெரிய குளத்துக்கு
இப்பாலும் அப்பாலும்
தொடர்பே அற்றுவிடும் சூழலிலே
அந்நியரா நாமுமக்கு? அப்படியா நினைக்கின்றீர்?
என்றெழுதி எங்கள் இதயத்தை அசைத்தவனே!

சென்று வருக,
திரும்பி வரா விட்டாலும்
நன்றியென்ற ஓருணர்வை நாம் சுமந்து நிற்கின்றோம்.
'மல்லிகை'யில்
இங்கே மலர்ந்தவற்றை
நீ நுகர்ந்து,
நல்லதெனில் மொழிபெயர்த்து
நாடறியச் செய்வதிலே
வல்லவனே!
கொழும்புக்கு வருகின்ற
நண்பர்களுக்காக
உன்வீட்டு
நாற்காலி காத்திருக்கும்
என்பார்கள்.
எனக்கிந்த இனிமை தெரியாது
பின்னாளில் நண்பர்கள் பேச்சுரைக்கக் கேட்டதன்றி
கண்ணாலே கூடக் காணாத
உன்னுடலை
மண்மூடிப் போச்சே, மனங்கலங்கித் துடிக்கிறது.
சேது அணைக்கு
சிறு அணிலும் மண்சுமந்த
மாதிரியாய் நீயும் மண்சுமந்தாய்,
இணைப்புப் பாலங்கள் இற்று விழும் வேளையிலும்
அணையுடைந்து போகாமல்
அரவணைத்தாய்,
சென்று வருக,
வணக்கம் சகோதரா!

*மல்லிகை*
*ஐப்பசி 1986*

# புதிய கோணேசர் பதிகம்

கரைவலை வள்ளம் கடலெல்லாம் பாய்ந்து
கணக்கிலா மீன்களைச் சுமந்து
தரையினுக் கேகும் தகமைகள் சேர்ந்த
தமிழரின் திருமலைப் பூமி
உரைத்திட முடியா நெருப்பினில் வேகும்
உலைமுகம் போல்நிலையாகி
வரைபடம் மாறி வளங்களும் மாறும்
கோணமா மலையமர்ந் தாரே!

சந்ததம் தென்றல் வந்துவந் தாடும்
சங்குகள் ராவினிற் பாடும்
மந்திகள் தாவும் மான்மரை ஓடும்
மாவலி கங்கையும் பாயும்
மந்திரப் பூமி திருமலை நகரம்
மகிமைகள் யாவையும் இழந்து
அந்தரப் பட்டே அழிவுகள் நிகழும்
கோணமா மலையமர்ந் தாரே!

பால்தயிர் பாயும் பன்குளம் மூதூர்
பதவியா கும்புறுப் பிட்டி
கால் நடை சூழ்ந்த கன்னியா தோப்பூர்
கணக்கிலா அழிவுகள் நிகழும்
மேலிருந் தென்றும் குண்டுகள் வீழும்
முரடரின் ஆட்சிகள் ஓங்கும்

பெறுமதி மிக்க போரிலே மாளும்
கோணமா மலையமர்ந் தாரே!

திட்டமிட் டெங்கள் திருமலை நகரைத்
தின்றிடும் பேரின வாதம்
கட்டவிழ்த் திட்ட காடையர் சூழ்ந்து
கலங்கிடச் செய்திடும் போதும்
வட்டமிட் டெங்கள் வானிலே நின்று
வளங்களை எரித்திடும் போதும்
கொட்டிடும் குருதிச் சேற்றிலிப் பதிகம்
குறித்தவர் நிமிர்ந்தவர் ஆவர்!

*ஈழமுரசு*
*05.04.1987*

# நானொரு அகதி

நானொரு மனிதன்! நானொரு தமிழன்!
நாடெனக் கிருந்தும் நானொரு அகதி.
எனக்கொரு நாடும், எனக்கொரு மொழியும்
இருந்திடும் போதும் நானொரு அகதி.

'எந்தையும் தாயும்' மகிழ்ந்தயிந் நாட்டில்.....
எனக்கெனச் சுதந்திரம் எதுவுமே இல்லை....
மந்தைகள் கூட மகிழ்வுடன் தூங்கும்
மகிழ்வோடு நானோ தூங்கியதில்லை.

தமிழனைக் கொல்வோம் தமிழனைக் கொல்வோம்
தாரக மந்திரம் இதுவெனச் சொல்வோம்
சிங்கள நாட்டின் 'சுதந்திரகீதம்'
இப்படியான வரியுடன் தொடங்கும்.

இனவெறியாட்டம் 'தேசிய நடனம்'
இருபது தமிழனைக் கொல்பவன்'மேதை'
பிணங்களைத் தின்னும் பேய்களின் உருவம்
பொறித்தது 'சிங்களத் தேசியச் சின்னம்'.

பள்ளிகள் மீதும் குண்டுகள் பொழியும்
படிப்பகம் மீதும் குண்டுகள் பொழியும்
காலையிற் சென்று கரைவலை இழுத்தோர்
மாலையிற் பிணமாய் மறுகரை ஒதுங்குவர்.

பயங்கர வாதிகள் பதுங்கிய இடங்களை
ஆயுதப் படையினர் அழித்தன ரென்று
வாஹினிச் செய்தி காரணம் சொல்லும்.

நானொரு மனிதன் நானொரு தமிழன்
நாடெனக் கிருந்தும் நானொரு அகதி
எனக்கொரு நாடும் எனக்கொரு மொழியும்
இருந்திடும் போதும் நானொரு அகதி.

*அமிர்தகங்கை*
*1986*

# கூற்றுவனைத் தூக்கிலிடு

எங்கே என் தம்பி?
எங்கே என் தம்பி?
இங்கே இருந்தானே, இருந்தவனைக் காணவில்லை
எங்கே என் தம்பி?
மெல்ல..... மெல்ல
அந்த விளக்கணையும் வேளையிலே
எல்லோரும் சேர்ந்து 'எண்ணையிடு' என்றோமே
கல்லான நெஞ்சே...!
நீ கண்திறந்து பார்க்கவில்லை
நாவரண்டு நாவரண்டு
நாதமணிப் பேச்சிழந்து
பூ சுருண்டமாதிரியாய் போய்முடிந்து விட்டானா?
காற்றே நீ மூசு!
கடலலையே பொங்கி எழு.
கூற்றுவனா?
அவனைக் கொண்டுவந்து தூக்கிலிடு
எங்கே என் தம்பி?
எங்கே என் தம்பி?
இங்கே இருந்தானே இருந்தவனைக் காணவில்லை
என் இனிய திலீபனே!
ஒரு வார்த்தை...
ஓரே ஒரு வார்த்தை மட்டும்.....
பேசிவிடு....
'தமிழீழம்' என்ற தாரக மந்திரத்தைச்
சொல்லிவிட்டு;
மீண்டும் தூங்கி விடு
மக்கள் சமுத்திரத்தில்
மரணித்து விட்ட வீரனே!

ஒரு வார்த்தை;
ஒரே ஒரு வார்த்தை மட்டும்
பேசிவிட்டுத் தூங்கு.....
என்னினிய தோழனே!
உனது மரணப்படுக்கை கூட
இங்கே மகத்துவம் மிக்கதாகி விட்டது.
நீ கண்மூடியபடி தூங்குகின்றாய்,
அந்தப் படுக்கை இங்கோர் பூகம்பத்தையே
வரவழைக்கிறது
உன் சாவே இங்கோர் சரித்திரமாகி விட்டது.
செத்த பின்னர்
ஊர்கூடித்
தேம்புவது தான் இங்கு வழக்கம்.
ஆனால்....
ஊரே தேம்பிக் கொண்டிருந்த போது
மரணித்த வரலாறு
உன்னுடன் தான் ஆரம்பமாகிறது
சாவு பலதடவை உன்னைச் சந்திக்க வந்து
தோல்வி கண்டது
இப்போது
சாவை நீயாகச் சந்திக்கச் சென்று
வெற்றிகண்டு விட்டாய்
என் இனிய திலீபனே!
நீ கையில் ஆயுதம் ஏந்திய போதும்
அருகிருந்து பார்த்துள்ளேன்
நீ.... நெஞ்சில் அகிம்சை ஏந்திய போதும்
அருகிருந்து பார்த்துள்ளேன்
எந்த வித்தியாசமும் தெரியவில்லை
போராளிகளுக்குரிய போர்க்குணமே உன்னில் தெரிந்தது
இந்திய அரசே!

இது உனக்குப் புரிகிறதா?
தம்பி திலீபன்.... உன்னிடம் என்ன தான் கேட்டான்
எங்களை
சுதந்திரக் காற்றைச் சுவாசிக்கவிடு என்றான்.
எங்கள் மண்ணின்
இறைமையைத் தா என்றான்
இது குற்றமா?
இதற்காகத்தானே வாதாடினான்
இதற்கு என்ன பதில் தரப்போகின்றாய்...
உன்பதிலை
நேற்று வந்த விமானத்திலும் எதிர்பார்த்தோம்
தாமதித்து விட்டாய்
நீ கடத்திய ஒவ்வொரு நொடிப் பொழுதும்
இங்கோர் புயலையே உருவாக்கிவிட்டாய்
திலீபன் என்ற புயல்
உன்னைச் சும்மா விடாது
உசுப்பியே தீரும்
எங்கே என் தம்பி?
எங்கே என் தம்பி?
இங்கே இருந்தானே!
இருந்தவனைக் காணவில்லை
என் இனிய திலீபனே!
நிம்மதியாய்த் தூங்கு
நிலம் வெடிக்கப் போகிறது
காற்றே நீ மூசு
கடலலையே பொங்கியெழு
கூற்றுவனா?
அவனைக் கொண்டுவந்து தூக்கிலிடு!

*ஈழமுரசு 28.09.1987*

# உப்புக்காற்றே ஊது

கப்பல் உலாவரும் கடலே பேசு
உப்புக் காற்றே ஊதத் தொடங்கு
எங்கே எங்கள் தலைவர்கள் என்று
இந்திய அரசை எதிர்த்துநீ கேளு.

புலேந்திரன் குமரப்பா எங்கே? எங்கே?
அப்துல்லா, ரகு, நளன், கரன், எங்கே
அன்பழகன், மிரேஸ், தவக்குமார் எங்கே?
ஆனந்தகுமார் றெஜினொல்ட் பழனி
எங்கே எங்கே என்று நீ கேளு.

கப்பல் உலா வரும் கடலே பேசு
உப்புக் காற்றே ஊதத் தொடங்கு

வல்வெட்டித் துறைக் கடலிலே போனார்
வரிப்புலித் தலைவர்கள் கைதிகள் ஆனார்
இலங்கையின் அரசது விலங்கினை இட்டது
இந்திய அரசது உளம் மகிழ்ந்திட்டது.

கப்பல் உலாவரும் கடலே பேசு
உப்புக் காற்றே ஊதத் தொடங்கு

களம்பல கண்ட காளையர் இவர்கள்
பலப்பல சாதனை படைத்தவர் இவர்கள்
எதிரிகள் பாசறை எரித்தவர்கள் இவர்கள்
ஏற்றிய புலிப்படை இளையவர் இவர்கள்

கப்பல் உலாவரும் கடலே பேசு
உப்புக் காற்றே ஊதத் தொடங்கு

வேங்கைகள் கோழைகள் ஆவதும் இல்லை
விலங்குடன் வேங்கைகள் நடந்தும் இல்லை
கொள்கையின் படியிவர் நஞ்சினை உண்டார்
கோபுரத் தீபங்கள் தீயினில் போனார்.

கப்பல் உலாவரும் கடலே பேசு
உப்புக் காற்றே ஊதத் தொடங்கு

தீருவில் வெளியினில் மூண்டது நெருப்பு
தேம்பிய கடலுடன் திசைகளும் அழுதது
இறக்கிய ஆயுதம் எழுந்தது அங்கு
இவர்களின் சாவுடன் மூண்டது யுத்தம்

கப்பல் உலாவரும் கடலே பேசு
உப்புக் காற்றே ஊதத் தொடங்கு
எங்கே எங்கள் தலைவர்கள் என்று
இந்திய அரசை எதிர்த்து நீ கேளு!

*சுதந்திரதாகம்*
*நோர்வே*

# காலமழையில் கரையாத காற்சுவடுகள்

பூபதி அம்மா!
உன்பாதச் சுவடுகள்
காலமழையில் கரையாது.
தினமும் பூக்கும் சிவப்பு மலர்கள்
உன்முகம் காட்டியே முறுவலிக்கும்
தாயே! நீ தவமிருந்தாயே,
அந்தக் குருந்தமரம்,
அது வேர்பரப்பும் வேளையெல்லாம்;
இந்தமண் கூர்பிடிக்கும்.
குனிந்ததலை நிமிர்த்திக் கூத்திடும்.
அம்மா! நீ பேச்சிழந்து போனது,
உண்மை தான்.
ஆனால்......
மூச்சிழந்து போய்விட்டதாக,
முற்றுப் புள்ளியிட முடியாது.
எங்கள் மூக்குக்குள் நுழையும் காற்று,
வெறும் காற்றல்ல.... உன் மூச்சுத்தான்,
அடிக்கடி புயலடிக்கும் மண்ணில்தான்,
'பூபதிப்புயல்' மையம் கொண்டது.
புயல் புறப்பட்டதும்,
புழுதிமேகம் சுருதியடங்கியது.
அந்நியர் பாதங்கள்,
எங்கள் நெஞ்சை மிதித்த போது,
அன்னை கண்களைத் திறந்தாள்,
எங்கள் நெஞ்செரிந்த நெருப்பில்,
பாரதம் குளிர்காய எண்ணியது.

அரிசிப்பொரியோடு அணிவகுப்பு ஆரம்பமானது.
தங்கள் முகத்திரையைக் கிழிக்க,
இங்கே பூபதித்தாய் இருந்ததை,
அவர்களின் புலனாய்வுக் கமராக்கள்,
புகைப்படம் எடுக்கத் தவறிவிட்டன.
வீரத்துக்கு எங்கள் மண்ணில்,
வித்தியாசங்கள் கிடையாது.
ஆணுக்கும் பெண்ணுக்கும் பேதங்கள் இல்லை,
குஞ்சென்றும், மூப்பென்றும் எல்லைகள் இல்லை
இங்கு எல்லாமே போரிடும்.
பூபதி அம்மாவின் கால்பட்டமண்,
எப்படிக் கைகட்டிநிற்கும்?
தேரோடும் வீதியெல்லாம்,
எதிரிக்கு எதிராகப் போராடும் வீதிகளாயின,
பட்டினி வில்லெடுத்த பார்த்திபன்,
நல்லூரில் நாணேற்றினான்.
'என் மரணம் பலருக்கு ஜனனம்' என்றான்.
எங்கே அந்த விடுதலைக் குழந்தைகள்?
தமிழீழம் பார்க்கத் துடித்தது.
கட்டித் தழுவக் காத்திருந்தது.
பாரதம் மீண்டும் குருசேத்திரத்தைக் கண்டது.
எங்கள் மண் குருதி சேத்திரமானது.
எழுவான் திசையில் ஒரு ஒளிப்பிழம்பு.
இந்தா எழும்புகின்றேன் என்று,
திசைகள் சிவக்க சிலிர்த் தெழுந்தது.
'அன்னை பூபதி'
விஸ்வரூபமாக விண்தொட நிமிர்ந்தாள்.
தேசமே எரியும்போது எப்படித் தென்றல் வீசும்.
குருந்தமரநிழல்,
அவளுக்குக் குளிரவில்லை.
எரிமலைமுகட்டின் பெருவாய் திறந்து,

அக்கினிக் குழம்பு ஆறாய்ப் பாய்ந்தது.
சப்பை மூக்குகளும்,
தலைப்பாகைத் தலைகளும்,
அடிமுடி காண முடியாது நின்றன.
ஏவிவிட்ட சூனியக் காரர்கள்,
என்னசெய்வது என்று திகைத்தனர்.
பாரதத்தின்
விரல்களெல்லாம் விஷம்
இதழ்களில் மட்டும் இனிப்பு
இதைப் புலிகள்மட்டுமே புரிந்து கொண்டனர்
தேசம் தெரிந்து கொள்ள சிறிது நாளாச்சு.
தெரிந்தபோது
பூபதி அம்மா போருக்குப் புறப்பட்டாள்.
நெஞ்சுக் கவசம்
வெள்ளைக்குதிரை பூட்டியதேர்
கைநிறைய அஸ்திரங்கள்
எதுவுமின்றி,
நெஞ்சில் எரிந்த நெருப்புடன்
நேர்வந்தாள்;
வென்றாள்.
'ஆவடி' ஆயுதங்களால்
நாவலடிக் கல்லறையைக் கூட
சல்லடை யாக்க முடியவில்லை
எப்படி இயலும்
அது கல்லாலும் மண்ணாலுமா கட்டப்பட்டது?
இல்லையே,
எங்கள் வீரத்தாலும், குருதியாலுமல்லவா
உறுதியாக்கப்பட்டது!

*ஈழநாதம் 1993*

## பயணம் தொடரும்!

பயணம் தொடரும்! பயணம் தொடரும்!!
பாதைகள் நீண்ட பொழுதும்;
இவர்களின் பயணம் தொடரும்!

தோள்களில் தங்கள் தோழனைச் சுமந்து
புலரும் பொழுதில் பயணம் தொடரும்
நெஞ்சில் விடுதலை நெருப்பைச் சுமந்து
நீண்டவழியில் சுவடுகள் பதியும்
எதிரே தெரியும் எதிரியின் பாசறை
எரியும் வரையும் பயணம் தொடரும்

ஏந்தும் தோள்களில் எத்தனை பெருமை
இருக்கும் வீரனில் எத்தனை உறுதி
கனவுகள் சுமந்த இவர்களின் வழியில்
கவலைகள் ஏதும் வருவதே இல்லை
வெற்றியின் எல்லைகள் 'கிட்டு'ம் வரைக்கும்
வீரர்கள் ஒய்ந்து விடுவதும் இல்லை

காற்றும் மழையும் வரலாம்; எனினும்
கால்கள் நடக்கும் தோள்கள் சுமக்கும்
வீரனைச் சுமக்கும் வீரரின் நெஞ்சில்
விடுதலை உணர்வே விளையும்! விளையும்!!

*விடுதலைப்புலிகள்*
*ஆடி 1990*

# மீட்புப்புறா

லெப். சங்கீதா
என் தங்கையே!
கோட்டையின் முகப்பு வாசலில்
நீ விழுந்த இடத்தைத் தினமும் பார்க்கிறேன்.
எதிரியை எட்டிப்பிடிக்கக் கூடிய தூரம் வரை
நீ ஏறி நடந்து சென்றுள்ளாய்
இந்த வீரம் உனக்குள் எப்படி விளைந்தது?
புயலையும்; பூகம்பத்தையும்
எதிர்க்கும் பலத்தை
பூச்செடிக்குக் கற்றுத்தந்தது யார்?
கோட்டையை இடிப்பதற்கு
இன்று பலர் போகின்றார்கள்

ஆனால்......
கோட்டையைப் பிடிப்பதற்கு
அன்று சிலர் மட்டும் இருந்தீர்கள்.
கண்ணாடிக்கு முன்னால் நின்று
'கனடா'க் கனவுடன் ஒப்பனை செய்து
நீலக்கடித வரவுக்காக......
நித்தம் நித்தம் விழிகள் எறிந்து
வாழும் தமிழீழத் தங்கைகளுக்குள்ளே
ஒருத்தியாகத்தான் நீயும் பிறந்தாய்.
உனக்குள் மட்டும் இப்படியான
வீரம் விளைந்த காரணம் சொல்லு
இரவில் எறித்த நிலவைச் சபித்து
எதிரியின் பாசறை ஏறிநடந்து
போகும் துணிவு பிறந்தது எப்படி?

என் தங்கையே!
நீ விழுந்த இடத்தில் புல்லு முளைக்கலாம்
காலச் சுவடுகள் சோகம் மறைக்கலாம்
ஆனால்....

நீ எரிந்த இடத்தில் கோபுரம் எழும்பும்.
நீர்ச் சுனையோடு ஆலயம் எழும்பும்
இது...
கோட்டையைப் பிடிக்க ஏறிய புலிகள்
எரிந்த இடமென காலங்கள் கூறும்
தாயே தூங்கு! தங்கையே தூங்கு
'முடமாவடியில்' முளைத்த அரும்பே!
உனது தூக்கம் புயலை எழுப்பும்
உனது கனவை நாங்கள் சுமப்போம்.
விடியும் நேரம் விரைவில் கனியும்
விடுதலைப் புலிகளின் தாகம் தணியும்.

என் தங்கையே!
உனது நினைவோடு ஒரு நாள் காலையில்
தமிழீழ தேசியக் கொடியை தலைவன் ஏற்றுவான்.
நிம்மதியாக நீ உறங்கு அம்மா.

*மீட்புப்புறா*
*நினைவுமலர்*

## தாவணிக்கனவு மறந்த போர்மகள்

தமிழீழத்தின் தாகம் சுமந்து
தாவணி போடும் கனவுகள் துறந்து
போர்க்களம் ஆடிய
பெண்புலி ஒன்று
களத்திலே மடிந்து
காவியமானாள்.
வேலிகள் சுற்றிய எல்லைகள் மீறி
வேங்கைகள் அணியில்
ஏறிய நிலவு.
நிலவாய் இருந்தவள் நெருப்பாய் எழுந்தாள்
நெருப்பாய் நின்று
நெருப்பிலே எரிந்தாள்
கப்டன் சுந்தரி.
கண்ணுக்குள் நிற்கின்றாள்
மேடையில் நின்று
முழங்கிய கோலம்
ஆயுதம் ஏந்திய அக்கினிக் கோலம்
எல்லாம் எல்லாம்
எதிரே தெரிகிறது
ஒரு கொடி பூத்து
தமிழின விடுதலைக்
காற்றுத் தழுவி விரிந்த மலர்கள்
ஒன்றா? இரண்டா?
இவளுடன் சேர்ந்து

மூன்று உதிர்ந்தது.
உதிர்ந்த மலரிலும்
விதைகள் உண்டு
விதைகள் முளைக்கும்
விடுதலை சுமக்கும்
தாயக மண்ணில் விழுதுகள் பதியும்
எதிரியின் காற்றை
எதிர்த்தே நின்று
வேங்கைகள் வெல்லும்
விடுதலை கொள்ளும்.

*தமிழீழம்*
*1991*

# சிலுவை சுமந்த திலீபன்

இனிய திலீபனே!
எங்கள் நெஞ்சத்தில் குடிகொண்ட நெருப்பே!
அஞ்சற்க என்று அறிவித்த புயலே;
நீ........
இயங்காது விட்டு;
இரண்டு வருடங்களாகி விட்டதா?
நேற்று நடந்தது போல்..... அந்த நிகழ்வு.
காற்று, கடல், வானம் யாவும் அழுத;
நிகழ்ச்சி உன்னுடைய மரணத்தில் நிகழ்ந்தது.
நல்லூரின் வீதியில் நீ கிடந்ததையும்
நாவரண்டு நீ சுருண்டதையும்
நாங்கள் மறப்போமா?
உன்னை......
தொட்டு; மேடையில் இருத்தியதையும்,
தூக்கி; பாடையில் வளர்த்தியதையும்
மரணத்தின் பின்னரே நாங்கள் மறப்போம்.
எல்லோருக்கும்
மரணம் வாழ்க்கையின் முடிவு.
உனக்கு.....
மரணமே வரலாற்றின் தொடக்கம்.
நீ....... ஒரு வரலாறு.
சரித்திரமானது உன் சாவு.

திலீபனே!
தியாக வேள்வியில் ஆகுதி ஆனவனே!
திசைகள் யாவையும் தேம்பிடச் செய்தவனே!
உன் இறுதி மூச்சு இங்கு புயலானது.

பூகம்பத்தை எதிர்க்கும் புதிய பலத்தைத் தந்தது.
'இந்திய அரசு
காக்க வரவில்லை..... தாக்கவே வந்தது'
என்று.....
சதிகாரரைச் சரியாகவே இனம் கண்டு கூறினாய்.
பாரத அரசின் ஆதிக்க வேடத்தை
'கோட்டை வாசலில்' துகிலுரிந்து காட்டினாய்.
'உன் மரணம் பலருக்கு ஜனனம்..'... என்று
சாகும்போது பேசிய தலைவன் நீ.
திலீபனே!
உன்னை இழந்தோம்.
உன்னோடு உலவிய
வீரர்கள் பலரை வீதியிலே நாமிழந்தோம்.
ஆதிக்க பேய்க்கு அர்ச்சனைகள் செய்வதற்கு
நீதிக்கு வாழா.... நீசர்கள் சிலபேரால்
தியாக மலர்களிங்கு தெருவினிலே கிடக்கிறது.
திலீபனே! ........ நீ
தீயில் குளித்தவன்
தியாகத்தின் எல்லையை மீறி எழுந்தவன்
மக்களின் வேரிலே மலர்ந்தவன்.
மக்களுக்காக உலர்ந்தவன்
உன்பாதை நெடியது....... பயணம் கொடியது
என்றாலும் எங்கள் பயணம் தொடரும்.......
வேங்கையின் விழிகள் தூங்குவதில்லை
தாங்கிய கொடிகள் சரிவதுமில்லை.
உன் விழிகள் தேடிய வழியில்
தொடர்ந்தும் நடப்பார் புலிகள்.

*1989*

# நினைவழியா நாட்களும் நெஞ்சில் மூண்ட நெருப்பும்

அன்று;
எங்கும் இடிமுழக்கம்;
எறிகணைகள் கூவிவரும்;
எதிரி எம்மண்ணில்வர எத்தனித்திருப்பான்;
என்றாலும் இங்கே பதற்றம் இருக்காது;
கடைகள் திறந்திருக்கும்;
கோயில் கொடியேற்றம் இனிதே நடந்தேறும்;
சின்னத்தங்கை பள்ளிக்குப்போவாள்;
இறக்கையில் பெரிய குண்டுகள் சுமந்து,
'இரும்புப்பறவை' வட்டங்கள் போடும்;
கீழேவந்து 'எச்சங்கள்' போட்டு,
கிளம்பிக்கொண்டு மீண்டும் போகும்.
என்றாலும் எம்மண் பயந்து நடுங்காது.
எங்கும் இன்னிசை நிகழ்ச்சி நடக்கும்;
'நம்புங்கள் தமிழீழம் நாளை பிறக்கும்'
காற்றில் இந்தக் கானம் கலக்கும்;
காத்தவராயன் கூத்துத் தொடங்கும்

எல்லோருக்கும் ஒரே ஒரு நம்பிக்கை.
'அவர்கள் விழித்திருப்பார்கள்.'
நம்பிக்கை என்றும்
பொய்யாகிப் போகாது.
வாகனத்திலேறி புலிகள் விரைவர்;
'கிட்டு' தன்காரில்..... தெருவைக் கிழித்து,
களத்துக்குப் போவதைக் கண்டு மகிழ்வர்.
சற்றுநேரத்தில் சத்தங்கள் ஓயும்;
மரக்கிளைகட்டி உருவம் மறைத்த,

'50 கலிபர்' பூட்டிய 'பிக்கப்'
அங்கும், இங்கும் ஓடித்திரியும்.
'கிட்டு' அந்த 'வானில்' நின்று,
தோள்கள் உதறச் சுடுவதைப் பார்க்கலாம்;
குண்டுசுமந்து வந்துமிரட்டிய,
இயந்திரக் கழுகு எங்கோ மறையும்.
இன்று,
'50 கலிபர்' அழுகிறது.
'கிட்டு எங்கே? கிட்டு எங்கே?'
'இரு, இரு திரும்பி வருவேன்' என்று
என்னிடம் சொல்லிப் போனவன் எங்கே?
தளபதி திரும்பத் தாயகம் வருகையில்,
கடலில்மறித்த கைகளைக் காட்டு!
கப்பலின் மேல்தளத்தில்......
நெடிய பனைபோல நிமிர்ந்து நின்று,
கடைசிமணித்துளி என்னடா நினைத்தாய்?
கப்பல் தகர்ந்து கனல் மூண்டபோது,
என்தோழனே! என்னடா நினைத்தாய்?
தாயை நினைத்தாயா?
இதயமற்ற இரும்புச் சுடுகலன்,
எனக்கே விழிநீர் சொரியும் போது,
நெஞ்சில் உன்னைச் சுமந்த தாயகம்;
நெருப்பாய் நிற்கும் உனது தோழர்;
உலகத்திசைகளில் வாழும் நண்பர்;
உன்னை வளர்த்த உயர்ந்த தலைவன்,
எப்படிப் பொறுத்து இருந்திடக் கூடும்?
உனது நினைவை நெஞ்சில் சுமந்து,
எமதுபயணம் இனியும் தொடரும்.

*வெளிச்சம்*
*மாசி 1993*

# கனத்த நெஞ்சும் கண்ணீர் வரிகளும்

இளஞ்செழியனே!
நீ இறந்து போனாயா?
ஆம்!
உன் சிதைக்குத் தீமூட்டும் போது
நானும் பக்கத்தில் நின்றேன்.
ஆனால்....
இறப்பு உன் உடலுக்கு மட்டுமே
இலட்சியத்துக்கல்ல.
காவிய மொன்றுக்கு 'பாட்டுடைத் தலைவனாகும்'
தகுதி உனக்குண்டு.
உன் அப்பனோ
பரணியே பாடக்கூடிய 'பாவலன்'
என்றாலும் உன்னைப் பற்றி
என்னையே எழுதென்றான்
ஏன்?
நீயும், நானும், உன் அப்பனும்
ஒரே இலட்சியத்தையும்
ஒரே தலைமையையும்
ஏற்றுக் கொண்டவர்கள்.
'கட்டைக்காட்டுப்' போரில்
நீ களப் பலியானாய்
'எல்லன்குளத்தில்' உனக்குத் தீமூட்டிய போது
பக்கத்தில் நின்று பார்த்துக்கொண்டிருந்தேன்
அப்போது
உன் தாயழுதாள், தாயின் தாயழுதாள்

ஆனாலும் அப்பன் அழவில்லை
அப்பனும் மகனும் போர்க்களம் நிற்பது
அதிசயமல்ல....
ஆனால்,
ஒரு புலி தன் புலிமகனுக்கு
சீருடையில் நின்று சிதை மூட்டியது தான்
போராட்டத்தின் புதிய வடிவம்
தம்பி செழியனே!
உனக்குப் போர்க்களம் புதிதல்ல....
கோட்டைத் தகர்ப்பிலும்
சிலாவத்துறைத் தாக்குதலிலும்
எதிரியை இதற்கு முன்னரும் சந்தித்தாய்
ஆனையிறவுக்கு நீ அழைக்கப்படவில்லை
நீயாகத்தான் போனாய்
ஆனையிறவு யுத்தம்
தமிழனின் மானவுணர்வுக்கான யுத்தம்
எங்கள் தலைவனே தானை நடத்தினார்.
நீ துள்ளிக் கொண்டு போர்க்களம் போனாய்
உன்னை மரணம் சந்தித்த நிமிடம் வரை
உன் துப்பாக்கி எதிரியைத் துளைத்ததாம்
என் நண்பனின் மகனே!
எனக்குப் பெருமையாக இருக்கிறது.

*இளஞ்செழியன்*
*நினைவுமலர்*
*1991*

# அழகன்....!

அழகன்!

.....................................

இதற்கு மேல் என்ன எழுதுவது?
வார்த்தைகள் வரமறுக்கிறதே.
என் சோகத்தைச் சொல்ல
சொற்களுக்கு வலிமை இல்லை
நீ இல்லாத இடைவெளி
நிரப்ப முடியாது. நீண்ட நாட்களிருக்கும்
அழகா.
நீயும் நானும்
தினசரி ஒரு தடவையாவது சந்திப்போமே
அந்த இனிமை இனி இல்லையா?
என்ன பேசாமல் படுத்திருக்கின்றாய்
உண்மையைச் சொல்லு
இனி உன்னைக் காணவே முடியாதா?
நம்ப மறுக்கிறது நெஞ்சம்
நடுங்கிக் கொள்கிறது கரங்கள்
நீ இல்லாத இனிவரும் நாட்களிலும்
பூக்கள் மலரும்;
நிலவு வானத்தில் விளக்கேற்றும்.
தென்றல் மேனியைத் தொட்டு நடக்கும்
என்றாலும் இனிமை இராது
காலச் சருகு சொரிந்து
துயரச் சுவடுகளை அழித்து விடலாம்
உன் நினைவு எழாமலே.....
நாட்கள் வந்து போகலாம்
போகும்.

ஆனால் அந்த நாட்களில் அர்த்தமிராது.
அழகனே!
உன்னுடன் நெருங்கிப் பழகிய
எல்லோரையும் பார்க்கிறேன்
முகங்களில் துயரம் கோடு வரைந்துள்ளது.
பேசத் தொடங்கியதும் உன்நாமம் வருகின்றது
கண்கள் கலங்குகின்றது.
எவருக்கும் தெரியாது துடைத்துக் கொள்வதில்
எல்லோரும் கெட்டிக்காரரர்கள்
உன்னால் எப்படி...
பூவுடன் பூவாகவும்
புயலுடன் புயலாகவும்
உறவு வைக்க முடிந்தது?
காதலென்றால் என்ன?
வழமையான அர்த்தத்தைத் தூக்கி எறிவோம்
அதன் பிறகு பார்ப்போம்.
தூய அன்பு என்று பொருள் வரும்.
இதன்படி
நீயும் நானும் காதலர்கள்
ஆணும் ஆணும் காதலிக்க முடியுமா?
முடியும்.
நீயும் நானும் உதாரணம்.

*அழகன் நினைவு மலர்*
*1992*

# நிமிர்ந்து நின்ற நெடிய மேனியள்

நிமிர்ந்து நின்ற நெடிய மேனியள்
நெருப்பு ஏந்திய சிவந்த விழியினள்
கவிந்த அடிமை மேகத் திரள்களை
கலைக்க வந்த புரட்சிப் புயல் இவள்
பதிந்த வசந்தியின் காலடிச் சுவடுகள்
பசுமையாகவே எங்களின் நெஞ்சினில்
வதியும், நோயினால் சாவு உனக்குமோ?
வாழ்வை முடிப்பதில் இத்தனை வேகமோ?

பெண் விடுதலை பாடிய பூங்குயில்
போர்க்களத்தில் ஆடிய பெண்புலி
வண்ண வண்ணக் கனவுகள் யாவையும்
வாசலோடு விட்ட நெருப்பு இவள்
எண்ணில் ஆயிரம் கற்பனைக் கோட்டைகள்
இவளைச் சுற்றியே நாங்கள் எழுப்பினோம்
கண்ணில் நின்ற காவியம் போலவே
களத்தில் நின்றவள் கண்களும் மூடுமோ?

சோதியா எனும் சோதி அணைந்ததா?
சொற்ப ஆயுளில் வாழ்வு முடிந்ததா?
ஊதி ஊதியே எங்களை மூட்டியே
உணர்வு ஏற்றிய காற்றும் கலைந்ததா?
தாதியாய், தந்தையாய், தலைவியென்றாகியே
தலைநிமிர்ந்து நின்றவள், தீயில் என்ற
சேதி வந்தெமை திடுக்கிடச் செய்தது.
திக்கெல்லாம் ஒரு சோகம் கவிந்தது.

*தமிழீழம்*

# உலகத் திசையெங்கும் உன்குரல்

மாரியாச்சி!
என் தங்கையே!
புலியிருக்கும் குகையிருந்து
புறப்பட்ட புயற்காற்றே
பேரிடியாய் பகைமீது
மேல்விழுந்த பெண்புலியே!
எங்கள் சொந்த மண் சுடுமண்ணாகியது.
தென்றல்கூடத் தமிழீழத்தில் தீயாகியது.
அணையுடைத்து வந்த அந்நியக் காட்டாற்றை
தடுத்து நிறுத்தி வரம்பிடவும்
தாயகமண்ணுக்கு வேலியிடவும்
வளைக்கரங்கள் வலிமைகொண்டன.
பூவென்றுபாடிய 'புலவர்' உவமைகள்
பொய்யாகிப்போக.....
புதிய உண்மைகள்
உலகத்தின் முகத்தில் ஓங்கி அறைந்தன.

மாரியாச்சி!
உன்குரலும் உன்பலமும்
உலகின் முகத்தில் ஓங்கி அறைந்தன.
'மாங்குளம்'
எதிரியின் 'சிம்மாசனம்' உடைந்த இடம்
எங்களின் 'முகவரிக்கு' முத்திரை இட்ட இடம்.
இங்கே
எதிரி இறுமாப்புடன் தான் இருந்தான்
ஆனால்......
புலிகளிடம் புறமுதுகிட்டான்,

இந்தப்போர் 'ஈழத்துக் கலிங்கப் போர்'
'செயங்கொண்டான்' இல்லை அவ்வளவுதான்,
மாரியாச்சி!
நீயும் இந்தப் போரில் நின்றாய்.
நிலத்தில் விழுந்து போரில் வென்றாய்.
நீ எரிந்தாயா?
இல்லை... இல்லவே இல்லை
விரிந்து, பரந்து வியாபித்திருக்கின்றாய்.
உன்னை எரித்த நெருப்புக் கூட
அழுதபடியேதான் எரித்திருக்கும்.
உன் இறுதி மூச்சுக்கலந்த காற்றுக்கூட
கண்களைத் துடைத்தபடியே தான்
உன்னைச் சேர்ந்திருக்கும்.

மாரியாச்சி!
வீரம் விளைந்த விடுதலைப்புலியே!
உனது கனவு உறுதியானது,
நீ விழுந்த இடமும் எரிந்த இடமும்
புனிதமானது –
விரைவில் எங்கள் தாயகம் விடியும் –
'காலம் வந்து கைகளில்கிட்டும்
காற்று வந்து சேதிசொல்லும்'
நம்பிக்கையோடு நாங்கள் நடக்கின்றோம்
நிம்மதியாக தாயே உறங்கு!
நிம்மதியாக தங்கையே உறங்கு!

*ஒளியைத் தேடி*
*1990*

# படைகள் புறப்படுகின்றது வழியனுப்ப வா!

மதுரையில் நீதி கேட்டு
கண்ணகி காற்சிலம்புடன் நடந்தாள்
மட்டக்களப்பில் நீதிகேட்டு
'பூபதி' பசித்த வயிற்றுடன் கிடந்தாள்
காந்தி பிறந்த தேசத்துக்கு
திலீபன் கன்னத்தில் அறைந்தான்
....... அன்னை பூபதி
அடிக்கவில்லை காறி உமிழ்ந்தாள்
'இந்திய அரசே' வேங்கைகளுடன் மோதாதே
நிறுத்து! என்று போராடினாய்
உண்ணா நோன்பிருந்து உருகினாய்
அவர்கள் உன் மூச்சையே நிறுத்தி விட்டார்கள்
பாரத அரசு! உன் சாவுக்குப் பின்பு
பாதக அரசு என்று புலனாயிற்று
அம்மா! உன் இறப்பு
இந்திய அரசை அம்மணமாக்கியது
வெட்கம் கெட்டவர்கள்
வெளியில் உலாவுகின்றனர்
தாயே! நீ......
உண்ணா நோன்பிருந்து மரணித்த
முதற்பெண்மணி

தமிழீழ மக்களின் கண்மணி
தியாகப் புயலே! எங்கள் தேசத்தின் கனலே!!
உன் மூச்சுக்கலந்த காற்றுப்பட்டாலே....
வீரம் பிறக்கும்
தாயே! வணங்குகிறோம்
வாழ்த்துச் சொல்லு
படைகள் புறப்படுகின்றது
வழியனுப்ப வா.

*சுதந்திரதாகம்*
*நோர்வே*

# மீண்டும் சந்திப்போம்

மேஜர் பாரதி!
என் பிரிய சோதரி!
இன்று உனக்குப் பிறந்தநாள்
நேரில் வாழ்த்துக் கூற நீயில்லை
நெஞ்சோடு வாழும் நினைவுகளால் பயனில்லை
நீண்ட தொலைவுக்கு
தொலைவுக்கும் அப்பால்....
நினைவுகளை எறிகின்றேன்
அவை மீண்டும் உன்பெயரைச் சொல்லியபடி
என்னிடமே ஓடிவருகின்றன
நீயும், கஸ்தூரியும்
பாதையும் இலக்கும் ஒன்றாகிய பயணிகள்
இருவரையும் அடுத்தடுத்துத் தொலைத்துவிட்டு
உங்கள் நினைவுகளுடன் மட்டும் நான்
பாரதி!
என் பிரிய சோதரியே!
இன்று உனக்குப் பிறந்தநாள்
எனது வாழ்த்துக்கள் கேட்கிறதா?
மீண்டும் சந்திப்போம்.

*ஈழநாதம்*
*1993*

## வேங்கைகள் எங்கே?

தளபதிகிட்டு தலைவனின்குட்டிச் சிறியெனும் தம்பியும்
எங்கே?
மலரவன், ஜீவா, நாயகன், றொசான் என்றிடும்
வேங்கைகள்எங்கே?
புலிகுணசீலன் தூயவன் அமுதன் நல்லவன் என்பவர்
எங்கே?
போர்முகத்தேறி புயலெனவீசிப் பொங்கிய வீரர்கள் எங்கே?

எங்கே எங்கே வேங்கைகள் எங்கே
இந்திய அரசே! பதில் சொல்லு – இவர்
சந்தனமேனி செந்தணல் ஆன
சங்கதி தெரியும் பதில் சொல்லு.

பொங்கிடும் கடலில் புலிமறவீரர்
போய்வரக்கூட முடியாதா? – நாம்
எந்தையர் கடலில் எழுந்திடக் கூட
இந்திய நாடு தடைதானா?

திலீபனைக் கொன்றாய் தீருவில் வெளியில்
தீயினை மூட்டியும் நின்றாய் – இன்று
பலியெடுத்துந்தன் பற்களில் ரத்தப்
பாலினுக்காகவா கொன்றாய்.

தாயகம் நோக்கியே வீசிய புயல்களைத்

தடுத்தது இந்திய அரசு – இனிக்
காவியநாயகன் காட்டிடும் பாதையில்
களத்தினில் கேட்டிடும் முரசு.

கடலில் வெடித்த கப்பலிலிருந்து
கரும்புலி ஆயிரம் பாயும் – உனைத்
தடவும் தென்றல் காற்றும் இனிமேல்
தணலாய்த் தானே வீசும்.

# உன்னை மறப்போமா?

கைகள் வீசியெம் மண்ணில் நடந்ததும்
களத்தில் நின்றுநீ வெற்றி குவித்ததும்
பொய்கள் அற்றவுன் பேச்சும், சிரிப்பதும்
புலிகள் நெஞ்சிலே.... வலிமை சேர்த்ததும்
சுடுமணலிலே...... நீ நிமிர்ந்ததும்
'சூட்டி' வீழ்ந்ததா? என்று துடித்ததும்
ஒருவருடம் ஆச்சுதா? நண்பனே!
ஓம் எனில் எம் நெஞ்சு மறக்குமா?

*1992*

